"குடி அரசு" பதிப்பக வெளியீடு 2.

# இராமாயண ஆராய்ச்சி.

(முதற்பாகம்.)

## பாலகாண்டம்.

இரண்டாம் பதிப்பு 2000.



1930.



"UDI ARASU" PUBLISHING HOUSE.
ERODE.

"குடி அரசு" பதிப்பக வெளியீடு 2.



# இராமாயண ஆராய்ச்சி.

(முதற்பாகம்)

## பாலகாண்டம்.

இரண்டாம் பதிப்பு 2000.

"குடி அரசி"ல் சந்திரசேகரப் பாவலர் என்பவரால் 'இதிகாசங்கள்'
என்னும் தலைப்பின்கீழ் வெளிவந்த
இராமாயண ஆராய்ச்சிக் கட்டுரைகளைத் தொகுத்து

ஈரோடு
"குடி அரசு" பதிப்பகத்தாரால்
வெளியிடப்பட்டது.

1930.

விலை அணா 0—4—0.

# நூன்முகம்.



இதிகாசங்கள் என்ற சொல்லுக்குப் பொருள் பழைய கதைகள் என்பது. பழைய கதைகளெல்லாம் இப்பொழுதுத் தலைப்பின்கண் வருமோ என்றால் அவை வாரா. இராமாயணம், பாரதம் என்ற இரண்டுமே இதிகாசங்களெனப் பெயர் பெறுவன. இவைகளை நன்றாக ஆராய்ந்து படிப்பதால் பழைய காலத்திலிருந்த ஆரியர்களது பழக்க வழக்கங்களும், நீதி முறைகளும், இன்னும் அவர்களைப்பற்றிய ஒழுக்க முறைகளும் நன்கு புலனாகும். ஆதலின் ஈண்டு தலைப்பிட்டு அவ்விரண்டு நூல்களையும் ஆராயத்தொடங்குகின்றோம். இவ்வாராய்ச்சியைப் படிப்போர் இதனை ஆராய்ச்சிக் கண்கொண்டு நோக்க வேண்டுகின்றோம். முதற்கண் இராமாயணத்தை எடுத்துக்கொள்வோம்.

## இராமாயணம்.

இராமாயணம் என்பது இராமன் என்ற ஆரிய மன்னவனின் வாலாறு. தற்காலம் இவ்வாலாற்றை அறியாதவர் இலர். இது அவ்வளவு தூரம் ஆரியர்களால் தமிழ் நாட்டில் பரப்பப்பெற்றுள்ளது. நம் தமிழ் மக்களில் பெரும்பாலார் இவ்விராம சரித்திரம் நம்மவர்களைச் சேர்ந்த சரித்திரமென்றும், இராமபிரான் திருமாலின் அவதாரமென்றும், அது நம் தெய்வமென்றும் நினைத்துப் பாராட்டும்படி ஆரியர் செய்துவிட்டனர். இப்போது இச்சரித்திரம் பல ஊர்களில் வித்வான்கள் படிக்க பலர் கூடிப் பத்தி சிரத்தையோடும் கேட்கப் பெறுகின்றது. அவ்வாறு படிக்கும் வித்வான்களும் கேட்கும் அறிஞர்களும் இக்கதையின் உண்மையை அறிய வேண்டிக்கொள்ளுகின்றோம். அவர்கள் தயவு செய்து கீழே வரும் ஆராய்ச்சிக் கட்டுரையை கவனித்துப் படிக்கக் கேட்டுக்கொள்ளுகிறோம். அவர்கள் படிப்பதெல்லாம் தமிழ் மகனாகிய பெரும் புலவர் கம்பர் பாடிய இராமா

யணக் கதையே. கம்பர் தாம் பாடியுள்ள இராமாயணக் கதை யைப் படிப்போர் அது முழுதும் உண்மைதானு என்பதை அறிந்து கொள்வதற்காக வட மொழியிலுள்ள இராமாயணத்தையும் படிக்க வேண்டுமென்று அதன் பெருமையை முதலில் எடுத்தோதுகிறுர். ஏனென்ருல் கம்பர் தாம் பாடியுள்ள பாடல்களில் சிற்சில இடங்களில் தம் கதையை மாற்றி எழுதியிருக்கிறுர். புலவர்களில் மிகச்சிறந்த வரிலொருவராகிய கம்பர் இக்கதையைப் பாடிய பின்னரே இது தமிழ் மக்கள் பெரும்பாலாரால் படிக்கப்பெற்றது. கம்பர் சிறப்புப் பாயிரத் துட் பாடியுள்ள கீழே வரும் கவிகள் கவனிக்கற்பாலன.

"வைய மென்னை யிகழவு மாசெனக்
கெய்த வும்மிதி யம்புவ தியாதெனிற்
பொய்யில் கேள்விப் புலமையி ஞேர்புகல்
தெய்வ மாக்கவி மாட்சி தெரிக்கவே."

"தேவ பாடையி னிக்கதை செய்தவர்
மூவ ரானவர் தம்முளு முந்திய
நாவி ஞருரை யின்படி நான்றமிழ்ப்
பாவி ஞலிது ணர்த்திய பண்பரோ."

கெடப்பவும் அவைகளைப் பாடாது அந்நியராகிய ஆரிய வரலாற் றைப் பாடியதால் தம்மை வையம் பிற்காலத்தில் இகழும் எனவும் தனக்கு மாசு வந்தெய்துமெனவும் தெய்வப் புலவராகிய அவர் அறிந் திருந்தனர் போலும். வால்மீகி முனிவருடைய இராமாயணக் கதை யைப் பாடத்தொடங்கியவர் பல இடங்களில் சில செய்திகளை மறைத் தும் சில செய்திகளை மாறுபடுத்தியும் கம்பர் பாடியிருக்கிறுர். அவை களை அங்கங்கே வரும்போது எடுத்துக் காட்டுவோம். இங்கே நாம் வால்மீகி சென்ற வழியே வழியாகக் கதையைப் பின்பற்றி ஆராய் வோம்.



# பால காண்டம்.

## முதல் அத்தியாயம்.

இராமாயணம் ஏழு காண்டங்களாகப் பிரிக்கப்பெற்றுள்ளது. அவையாவன: பால காண்டம், அயோத்தியா காண்டம், ஆரணிய காண்டம், கிஷ்கிந்தா காண்டம், சுந்தர காண்டம், யுத்த காண்டம், உத்தர காண்டம். இவைகளில் முதலாவதாக பாலகாண்டத்தை முதலில் ஆராய்வோம்.

இராவணேசுவரனால் துன்பமடைந்த தேவர்கள் யாவரும் இந்திரரோடும் நான்முகனுலகடைந்து தங்கள் குறையைத் தெரிவித்துக் கொண்டிருந்தனர். அப்போது திருமாலும் அங்கே வந்து சேர்ந்தார். உடனே நான்முகனும் தேவர்களும் அவரை பூமியில் மனிதனாகப் பிறந்து இராவணனைக் கொன்று வரவேண்டுமென்று வேண்டிக்கொண்டனர். அவ்வேண்டுதலுக்குத் தாமும் இசைந்து அவர்களை நோக்கித் திருமால், "தசரத மன்னருக்கு மகனாகப் பிறந்து இராவணனைக் கொன்று பதினோராயிரம் ஆண்டு வாழ்ந்து பின்னர் இங்கே வருவேன்" என்று கூறினார். அவ்வாறே தசரதனுக்கு மகனாகப் பிறந்தார். இவ்வாறு பிறப்பதற்கு ஆதாரமான மற்ற காரணங்களையும் ஆராய்வோம். அவை:—

(1) ஓர்கால் திருமால் பிருகு முனிவருடைய மனைவியைக் கொன்றுவிட்டார். அதனால் அம்முனிவர் திருமாலை நோக்கி மனிதனாகப் பிறந்து மனைவியை இழந்து வருந்தும்படி சபித்துவிட்டார். இது முதற் காரணம். இது வால்மீகி ராமாயணம் உத்தரகாண்டம் ஐம்பத்தோராம் சருக்கத்திலுள்ளது. அங்கே விவரமாக ஆராய்வோம். இதே செய்தி மகா ஸ்காந்த புராணம் உபதேச காண்டம் அறுபத்து நாலாம் அத்தியாயத்திலும் கூறப்பெற்றுள்ளது.

(2) சலந்தராசுரனுக்கு மனைவியாகிய பிருந்தையைச் சேர வேண்டும் என்னும் காதல் மிகக் கொண்ட திருமால் அவ்வசுரன்

இறந்தமைகண்டு அவளுடலில் நுழைந்துகொண்டு அவளின்ப நுகர்ந்து கொண்டிருந்தார். சில நாட்களில் அவரை அக்கற்பாசி இன்னுமென அறிந்துகொண்டு, "மாயையினுல் என்னேடு கூடி, அத ஞல் பிறர் மனையாளைப் புணரலென்னும் குற்றத்திற்குள்ளாகிய ஏ திருமாலே! உன் மனைவியைப் பகைவன் வஞ்சனையாலெடுத்துப் போகக் கடவன். என் கணவன் உடம்பினைக் குரங்குகளால் நீ கொண்டுவந்ததனுலே நீயும் குரங்குகளோடு சேர்ந்து காட்டில் அலை யக்கடவாய்" என்று சபித்தாள். பின் உடனே அவள் தீக்குளித்து கெட்ட தன் உடலை சாம்பராக்கினுள். இச்செய்தி மகா ஸ்காந்த புராணம் தக்க காண்டம் இருபத்துமூன்றும் அத்தியாயத்திலுள் ளது. பின் திருமால் அவள் சாம்பலிற் கிடந்து புரண்டனர். அதன் பின் அச்சாம்பலில் முளைத்த துளசியை யணிந்து மயக்கந் தீர்ந்தனர் என்ப. இது இரண்டாவது காரணம்.

(3) ஒருபிரதோஷ வேளையிலே திருமால் மனித உடம்போடு திருமகளைப் புணர்ந்துகொண்டிருந்தார். அப்போது சோதனைக்குச் சென்ற அற்புதாக்கன் என்னும் சிவகணத் தலைவன் அவரை நோக்கி "நீயாரடா?" என்று கேட்டான். அதற்குக் கொஞ்சமும் வெட்க மின்றி விலகாமல் திருமால் அவள்மேலிருந்தவண்ணமாகவே "கேட் பது யாரடா?" என்றனர். இவ் வெறுக்கத் தகுந்த செயலைக்கண்டு மீண்டு அத்தலைவன் இச்செய்தியை நந்திபிரானிடம் தெரிவித்தான். உடனே நந்திதேவர் அத்திருமாலை பூமியில் இராமனுய்ப் பிறந்து மனைவியைப் பிரிந்து வருந்துமாறு சபித்தனர். இது செய்தி சிவரக சியத்து மூன்றும் அம்சத்து இரண்டாம் காண்டம் நாற்பத்துமூன் ரும் சருக்கத்தில் காண்க. அச் செய்யுள் வருமாறு:—

"அவனைநீ யாவனடா வென்று கேட்டே
னம்புயப் பெண் ணைத்தழுவ லீங்கில்லா
னெவனமா துடன்கூடி யிலச்சை யின்றி
யென்னைநீ யாவனடா வென்று கேட்டான்.
கவனமுறு மிவன்தூர்த்த னென்று கண்டேன்
கருத்தி லவன்றனைத் தள்ள வல்லே னெம்மான்
சிவனருள்சே ருனதாணை குறித்து மீண்டேன்
தேவரி லிதொரு புதுமை யவன்பாற் கண்டேன்"

"மன்னவன் றன் மைந்தனு மிராமனுகி
வந்து பிறந் திடக்கடவ னுகுமன்றே"

இது மூன்ருவது காரணம்.

இதுபோன்ற யாதொரு செய்தி சிவ ரகசியம் 3ம் அமிசம் 2ம் காண்டம் 4ம் சருக்கத்திலும் காணப்படுகின்றது. அதாவது வைகுண்டத்தில் திருமால் பிரதோஷ வேளையாகிய மாலைக் காலத்திலே திருமகளைப் புணர்ந்துகொண்டிருக்க, அங்கே பிருகு முனிவர் அவரைக் காணச் சென்றனர். அப்போது தடுத்த கருடனைச் சாம் பாராக்கி அம்முனிவர் உள்ளே நுழைந்தார். அவர் வருவதைக்கண்ட திருமால் நீங்காமல் புணர்ச்சியி லிருந்தபடியே அவரை வராது நிற்கும்படி கைகாட்டித் தடுத்தனர். உடனே பிருகு முனிவர்

"எந்நாளு மினியவந் திவேளை தன்னி
லேந்திழையைப் புணர்வரோ வுனக்கிப் புத்தி
சொன்னூா ருன்மத்த முண்டோ வென்று
தூயமா தவன்ருன்மா தவனை நோக்கிப்
பன்னாளும் பிரதோடந் தனிலுன் னுமம்
பகர்ந்துளோர் தரிசித்தோர் பரவல் செய்தோர்
துன்னுத நிரயத்திற் புகுவா ரென்று
சூழ்கோபத் தாற்சாபஞ் சொல்லிப் போனுன்."

மேலேகண்ட சாபங்கள் பலிக்குங் காலம்வர, திருமால் தேவர்களின் வேண்டுகோளின்படி பூமியில் மனிதனுகப் பிறந்தார்.

---

## இரண்டாம் அத்தியாயம்.

---

அயோத்தியா புரியிலே சூரியகுல மன்னனுகிய தசாதன் அரசு புரிந்து வந்தான். அவன் வசிஷ்ட முனிவரின் நல்லுரையாலும், அமைச்சனுகிய சுமந்திரனுடைய நன் மந்திரத்தாலும் செம்மையாக அறுபதினுயிரம் ஆண்டுகள் அரசு புரிந்தான். இவனுக்கு கௌசலை, கைகேயி, சுமத்திரை என்ற பட்டப்பெண்கள் மூவரும், வேறு அறுபதினுயிரம் பெண்களும் மனைவியர். இவர்கள் ஒருவருக்காவது

குழந்தை உண்டாகவில்லை. அதனால் மிகவும் கவலையடைந்த தசா தன் தமது குல குருவோடும் மந்திரிகளோடும் ஒருநாள் பலவாறு சிந்தித்துப் பிள்ளைப் பேறுக்காக அசுவமேத யாகம் செய்வதாகத் தீர்மானித்தனன். குலகுருக்களின் அனுமதிபெற்ற அரசன் தனது மந்திரிகளை நோக்கி குருக்களின் ஆணைப்படி வேண்டும் பொருள் களைத் தயாரிக்கும்படி கட்டளை யிட்டனன். அச் செய்தி கேட்ட அவன் மனைவியர் மகிழ்ந்தனர்.

அப்போது சுமந்திரன் அரசனை ஏகாந்தத்தில் பார்த்துப் பின் வருமாறு சொல்லலுற்றான்.

"முன்னர் முக்கால ஞானியாகிய சநத்குமாரர் சொன்னவைகளைச் சொல்லுகிறேன். காசியப முனிக்கு விபண்டகரென்ற மகனிருக்கிறார். அவருக்கு ருசியசிருங்கரென்ற ஒரு மகன் பிறப்பான். அந்தக்காலத்தில் அங்க தேசத்திலே ரோமபாதரென்னும் அரசர் தோன்றுவார். அவர் நாட்டில் தீராத பஞ்சமுண்டாக, அதனை நீக்குவதற்காக அம்மன்னர் ஆலோசித்து தாசிகளால் அம்முனி மகனை அழைத்து வந்து தமது மகள் சாந்தையை மணஞ்செய்து கொடுப்பார். அம்முனி மகன் வந்தால் மழை பெய்து பஞ்சம் நீங்கும். அவரை அழைத்துவந்து தசரதர் யாகஞ்செய்து மகப்பேறடைவார். இவ்விதமாக அம்முனிவர் சொல்லியிருக்கிறபடியால் ருசிய சிருங்கரை அழைத்துவந்து தாங்கள் அந்த யாகத்தைச் செய்யவேண்டும்"

இவ்வாறு சுமந்திரன் சொன்ன மொழியைக் கேட்ட தசரதன் ருசிய சிருங்கரை ரோமபாத மன்னர் எவ்வாறு தமது நாட்டுக்கு அழைத்து வந்தார் என்று கேட்டனன். அந்த வரலாற்றை சுமந்திரன் கூறினான். (அவ்வாறு வால்மீகி ராமாயணத்தில் ஒன்பதாவது பத்தாவது சருக்கங்களில் உள்ளது)

(இவ்வாராய்ச்சியில் நாம் குறிப்பனவெல்லாம் நமது சொந்த மொழிகளென எண்ணுதல் கூடாது. வால்மீகி முனிவர் இராமாயணத்தைத் தமிழில் பண்டித நடேச சாஸ்திரியாரும், பண்டித அனந்தா சாரியாரும் மொழி பெயர்த்து அச்சிட்டிருக்கின்றனர். பண்டித தத்தர் என்பவர் ஆங்கில மொழி பெயர்ப்பை வெளிப் படுத்தியுள்ளனர். இவர்களுடைய சொற்களின் போக்கையே நாம்

எடுத்தாளுவோம். இவ்வாராய்ச்சியினால் வால்மீகி ராமாயணம் படியாதவர் மயக்கம் ஒருவாறு நீங்கு மென்பது எமது நம்பிக்கை.)

ருசிய சிருங்கர் வரலாற்றை ஆராய்வோம்.

உரோமபாதனென்னும் அங்க மன்னர் சில புரோகிதர்களை யழைத்து ருசியசிருங்கரையழைத்து வருமாறுஏவினர். ஆனால் அவர்கள் மன்னரை நோக்கி "யாங்கள் போகமாட்டோம், பாலியாகிய அவரை எங்களால் வசப்படுத்த முடியாது. மாந்தர் மனதைக் கவரச் செய்யும் இனிய சிற்றின்பங்களால் அவரை மயக்கி வசப்படுத்த வேண்டும். நல்ல அழகுள்ள தாசிகளை நல்ல அலங்காரங்களைச்செய்து கொண்டு அவரிடம் அனுப்பி பலவித உபாயங்களைக் கொண்டு அவரை அன்பு கூரச்செய்து வசப்படுத்தி அழைத்துவரச் செய்ய வேண்டும்" என்றனர். அதன்படி பல அழகுமிக்க தாசிகள் அனுப்பப் பெற்றனர். அத்தாசிகள் ருசிய சிருங்கரைக் கண்டனர். அம் முனி மகன் தாம் ஆசைப்படும்படியான அழகுடையவர்களாக அம் மாதர்கள் இருப்பதைக் கண்டு அவர்களிடம் அன்பு கொண்டனன். அப்பெண்கள் அவனை நன்றாக ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு மகிழ்ச்சியோடு அவனுக்குக் கொழுக்கட்டை முதலிய பலகாரங்களை ஊட்டினர். அம்முனிவனுடைய ஆச்சிரமத்தில் இவ்வாறு ஆலிங்கனம் செய்து அவரை மயக்கிவிட்டு அவர்கள் தாங்கள் தங்கியிருந்த இடத்திற்குச் சென்றார்கள், அவர்கள் பிரிந்ததும் அவன் மனங் கலங்கி ஓரிடத்திலுமிராமல் மயங்கித் திரிந்து கொண்டிருந்தான். மறுநாள், அவர்களிடம் சென்ற மனதைத் திருப்பமுடியாதவனாய் அவன் மனமருட்டும் அம்மங்கையரிருந்த இடத்திற்குச் சென்றனன். அவர்களும் அவனைப் பலவாறு மயக்கி "நீர் எங்களோடு வந்தால் உமக்கு இதைப்போல இன்பம் அதிகமாகக் கிடைக்கும்" என்றனர். உடனே அவன் தனது தந்தைக்குச் செய்யவேண்டிய பணிவிடைகளையெல்லாம் மறந்து அவரிடம் சொல்லாமல் அப்பெண்களோடு புறப்பட்டுச் சென்றான். பின் அங்கதேசத்தை அடைந்து அம் முனி மகன் அரசன் மகள் சாந்தையை மணந்து காம இன்பம் நுகர்ந்து கொண்டு அரண்மனையிலேயே இனிதிருந்தான். உடனே மழை பொழிந்து நாடு செழித்தது.

இவ்வரலாற்றைக் கவனித்துப் பார்த்தால், தனது தந்தைக்குச் செய்யும் பணிவிடையை மறந்து அவரிடம் சொல்லாமல் காமவசப்பட்டு தாசிகளோடு காட்டிலிருந்து ஓடிவந்து நாடுபுகுந்து ஓர் பெண்ணைக் கலியாணஞ் செய்துகொண்ட ஒருவன் கால்வைத்த புண்ணியத்தால் மழை பெய்வது என்றால் அத்தெய்வத்தின் தெய்வத்தன்மைதா னென்னே! தந்தைக்குச் செய்யவேண்டிய கடமையினும் வேசையர் காமவசப்பட்டிருத்தலே மேன்மையான புண்ணியம் போலும்! இத்தகைய மகாநுபாவனையே பிள்ளைப்பேறுகருதி யாகம் செய்யத் தொடங்கும் தசரதன் யாக கர்த்தாவாக அழைத்து வருகின்றனன். ருசிய சிருங்கர் வரவைக்கண்டு மழை பொழிந்தவன் இந்திரன். இவ்விந்திரனின் மகிமைகளைப் பின்னர் ஆராய்வோம், பாதாரகமனப் பிரியனுகிய இந்திரன் வேசையர் லோலனுகிய ருசிய சிருங்கனைக் கண்டு மகிழாமல் வேறு யாது செய்திருப்பன்?

இந்த ருசியசிருங்கன் வரலாற்றை கம்பர் எவ்வாறு கூறுகிருரென்று கவனிப்போம். தசரதன் வசிட்ட முனிவரிடம் தன் பிள்ளையில்லாக் குறையைச் சொன்னதாகவும், அம்முனிவர் திருமால் அவனுக்குப்பிள்ளையாகப் பிறக்கப்போவதாக சொல்லியிருக்கிறதாகவும், அதனால் கலைக்கோட்டு முனிவரை (ருசியசிருங்கரை) அழைத்துவந்து அசுவமேத யாகஞ் செய்தால் திருமால் வந்து பிறப்பார் என்றும் சொன்னதாக எழுதுகிருர். இது வால்மீகி வரலாற்றுக்கு மாறுபட்டது. தசரதனுக்குத் தன்னிடம் திருமால் வந்து பிறக்கப்போவதாகத் தெரியாது. அவனிடம் ஒருவரும் சொல்லவில்லை. சுமந்திரன் கூட இதை உணர்ந்தவனுமல்லன். தசரதனிடம் சொன்னவனுமல்லன். கம்பரே உண்மையை மாற்றி வசிட்டர் திருமால் பிறப்பைத் தசரதனிடம் சொன்னதாக எழுதுகிருர்.

மேலும் கம்பர் தமது நூலில், ரோமபாத மன்னன் புரோகிதனை நோக்கி கலைக்கோட்டு முனிவரை அழைத்துவரவேண்டியது என்றதும் அவர்கள் தம்மாலாகாது மனிதருடைய மனதைக் கவரும் இனிய சிற்றின்பத்தால்தான் அவரை மயக்கி அழைத்துவரவேண்டும் என்று கூறியதும் ஆகிய வரலாற்றைக் கூருது மறைத்துவிட்டார். "அப்பெண்களை "சோதி நுதற்கருநெடுங்கட் டுவரிதழ்வாய்த் தரள நகைத்துணை மென்கொங்கை மாதர்" என்றும், "பனிப்பிறை

யைப் பழித்தநுதற் பனைத்தவேய்த் தோள் எங்குமிடை தடித்த முலை இருண்ட குழல் மருண்ட விழி இலவச் செவ்வாய்ப் பூங்கொடியீர்" என்றும் வருணித்த கம்பர் அவர்கள் வனஞ்சென்று தவசிகளைப்போல இருந்தார்கள் என்றார். இதுவும் வால்மீகர் கூறுதது. பின் அவர்கள் கலைக்கோட்டு முனியை ஆலிங்கனம் செய்ததையும் கம்பர் மறைத்தார்.

"அம்மாதர்கள் அந்த ருசியசிருங்கர் ஆசைப்படும்படியான அழகுடையவர்களாய்" (வால்மீகி ராமாயணம் பத்தாவது சருக்கம்) என வருவதையும் மற்றும் நாம் மேலே வால்மீகி கூறியதாக எடுத்துக் காட்டியுள்ள வாலாற்றையும் மறைத்து கம்பர் ருசியசிருங்கரை மிகவும் உத்தமராகக் காட்டுகிறார்.

பின் சுமந்திரனுரைத்த மொழிப்படி தசரதன் "புத்திரருண்டாகச்செய்ய வல்லவராகிய சாந்தையின் கணவரான ருசியசிருங்கரை" அழைத்துவரும்பொருட்டு தானே அங்க நாடு சென்றான். அங்கே ரோமபாத மன்னரால் உபசரிக்கப்பட்டு சின்னாளிருந்து பின் கலைக்கோட்டு முனிவனைச் சாந்தையோடும் அழைத்துக்கொண்டு அயோத்தியை வந்தடைந்தான். அதன்பின் தசரத மன்னன் பிள்ளைப்பேற்றுக்காக அசுவமேத யாகஞ் செய்யத் தொடங்கினான்.

---

# மூன்றாவது அத்தியாயம்.

---

தாசிப் பெண்களால் மயக்கி நாட்டுக்கு அழைத்துவரப்பெற்ற கலைக்கோட்டு முனிவனை அயோத்திக்கு அழைத்துவந்த தசரதன் அசுவமேத யாகம் செய்யத் தொடங்கினான். யாகக் குதிரை நாடு சுற்ற அனுப்பப்பெற்றது. அரசர்களெல்லோரும் வந்து சேர்ந்தனர் அயோத்தியை யடுத்துள்ள சரயு நதியின் வடகரையில் யாகம் தொடங்கப்பெற்றது.

குதிரையை விட்டு ஓராண்டு நிரம்ப அக்குதிரையும் வந்து சேர்ந்தது, கலைக்கோட்டு முனிவன் தலைமை பூண்டு வேள்வியை நடத்தினான். யாகத்திற்கு நாற்புறத்தும் பிராமணர்கள் உட்கார்ந்துகொண்டு நன்றாய்ச் செழித்திருந்த சோம மென்னும் கொடியைக் கல்லெடுத்து

நெருக்கி யாகம் செய்யவேண்டி அதிலிருந்து ரசத்தை நன்றாகப்பிழிந் தெடுத்தார்கள்.

இருபத்தொரு யூபஸ்தம்பங்கள் நாட்டப்பட்டன. அவைகள் மிகவும் அலங்காரம் செய்யப்பெற்றன. அந்த யூபஸ்தம்பங்களில் அவ்வவ் வானவர்களைக் கருதிப் பசுக்களும் பாம்புகளும் பறவைக ளும் நூல் தவறாது கொண்டுவந்து கட்டப்பட்டன. அசுவமேதம் என்னும் அச்சிறந்தயாகத்தில் விதிப்படி பசு ஹிம்சை செய்யவேண் டிய சமயம் வருகையில் குதிரையும் ஆமை முதலிய நீர் வாழ்வனவும் மற்றும் யாகத்திற்கு வேண்டிய பசுக்களும் ஆகிய இவையெல்லாம் விதிப்படி கொண்டுவந்து கட்டப்பெற்றன. அந்த யாகத்தில் யூபஸ் தம்பங்களில் முன்னூறு பசுக்களும் சிறந்த ஒரு குதிரையும் கட்டப் பட்டிருந்தன.

அரசன் முதல் மனைவியான கோசலை யென்பாள் அக்குதிரை யைச் சுற்றிவந்து அக்குதிரையை மூன்று வெட்டாகவெட்டிக்கொன் றாள். பின் அவள் தரும காரியத்தில் விருப்பமுடையவளாய் கலங்கா நெஞ்சுடன் அவ்விரவு முழுதும் கட்டித் தழுவி அந்தக் குதிரை யோடு கூடியிருந்தாள்.

பின் கௌசலை, கைகேசி, சுமித்திரை முதலிய இராஜஸ்திரீகளை அத்வர்யூ, ஹோதா முதலிய முக்கியமான இருத்துவிக்குக்களுக்குத் தட்சணையாகத் தசாதர்கொடுத்துவிட்டார். இருத்துவிக்குகள் இராஜ பத்தினிகளைக் கைப்பற்றிக்கொண்டு சிலநேரம் திரிந்தனர். பின்பு அவர்களுக்கீடாக திரவியங்களைப் பெற்று அவர்களை அவ்வரசனுக்கே கொடுத்துவிட்டார்கள். இந்த அசுவமேத யாகம் நடந்த அன்றே கௌசலையும், கைகேசியும், சுமித்திரையும் கருத்தரிக்கின்றனர்.

இந்த யாக விவரமெல்லாம் வால்மீகி ராமாயணம் பதினன்கா வது சருக்கத்தில் காணப்படுகிறது. இதனை மொழி பெயர்த்துள்ள பண்டித அனந்தாசாரியார் இந்த இடங்களைப் பின்வருமாறு மொழி பெயர்க்கின்றார். "கௌசல்யை அக்குதிரையை மூன்று கத்திகளால் கொன்றாள். கௌசல்யை ஓர் இரவு முழுதும் அக்குதிரையோடு கூடியிருந்தாள். ருத்விக்குகள் ராஜஸ்திரீகளை மன்னவர் தக்ஷிணை யாகக் கொடுத்ததனல் கைப்பற்றினர்".

பண்டித நடேச சாஸ்திரியார் பின்வருமாறு மொழி பெயர்த்து எழுதுகின்றார்:— "கௌசல்யை அக்குதிரையை வாளால் சில துண்டுகளாக வெட்டி வீழ்த்தினள். அன்றியும் ஸ்திர சித்தத்துடன் அவள் புத்திரபாக்கியம் அடையும் விருப்பத்தால் சாஸ்திர விதிப்படி அன்றிரவு முழுதும் அவ்வசுவத்தின் அருகே இருந்தாள். ஹோதா அத்வர்யு உத்காதா முதலிய யாக கர்த்தாக்கள் உரிய தக்ஷிணைகளைப் பெற்று ராஜ பாரியைகளுடன் இருந்து சடங்கு நடத்தினார்கள்".

பண்டித மன்மத நாததத்தர் பின்வருமாறு மொழி பெயர்த்து எழுதுகிறார்:— Kausalya with three strokes slew that horse, experiencing great glee. Kausalya with an undisturbed heart passed one night with that horse. The Hotas, Adhwaryus and the Ugatas joined the king's wives.

இதன் பொருள் வருமாறு:— கோசலை மூன்று வெட்டில் அக் குதிரையை மிக உத்சாகத்தோடு கொன்றாள். அவள் கலங்கா நெஞ் சோடு ஓர் நாளிரவை அக்குதிரையோடு கழித்தாள். ஹோதா, அத் வர்யு முதலிய ரித்விக்குகள் இராஜ பார்யைகளைப் புணர்ந்தார்கள்.

(பண்டித வில்சன் துரை மகனார்) வேதகால இந்து மதம் (Vedic Hinduism) என்ற நூலில் பின்வருமாறு எழுதுகிறதாகக் குறிக்கப்பட்டுள்ளது. Kausala is directed to be all night in closest contact with the dead horse In the morning, when the queen is released from this disgusting and in fact, impossible contiguity a dialogue, is given in the yajush and in the Ashvamedha section of the Sathapatha Brahmna and as explained in the Sutras, as taking plase between the queen and the females accompanying or attending upon her and the principal priests which in brief is in the highest degree both silly and obscene.

இதன் பொருள் வருமாறு:— கோசலை ஓர் இரவு முழுதும் செத்தக் குதிரையை நன்றாகத் தழுவிப் படுத்திருக்கச் செய்யப்பட் டாள். காலையில் இந்த அருவருப்பானதும் உண்மையாகவே அசாத் தியமானதுமான அக்குதிரையின் தேக சம்பந்தத்தினின்றும் நீங்கின

உடனே யசுர் வேத சதபத பிராமண அசுவமேத அத்தியாயத்திலும் சூத்திரங்களிலும் விவரித்துள்ளபடி இராச பத்தினிகளுக்கும் அவர்களைச் சூழ்ந்துள்ள பெண்களுக்கும் ருத்விக்குகளுக்கும் ஓர் சம்பாஷணை நடைபெற்றது. அது சுருக்கமானதாக இருந்தபோதிலும் சொல்லுவதற்கு மிகவும் அசங்கிதமாகவும் அருவருப்பை உண்டாக்குவதாயும் இருக்கிறது.

தெலுங்கில் வால்மீகி ராமாயணத்தை மொழிபெயர்த்துள்ள பண்டித லட்சுமணாசார்லு தமது மொழிபெயர்ப்பில் பக்கம் 181ல் யாகம் முடிந்தவுடன் நடத்துபவன் தனது மனைவியரை குருக்களிடம் தட்சணையாக ஒப்புவிக்கவேண்டுமென்பதும் பின் பணம் பெற்றுக் கொண்டு அப்பெண்களைச் சொந்தக்காரனிடம் ஒப்புவிக்கவேண்டுமென்பதும் சாஸ்திர விதி என்றெழுதுகிறார்.

மேலே கண்ட செய்கைகளைப் பார்க்குமிடத்து ஆரியர்களது அருவருப்பான செய்கைகள் நன்கு புலனாகின்றன. பலசாலியான ஒரு வீரன்கூட மூன்றுவெட்டில் ஒரு பெரிய குதிரையை வெட்டி வீழ்த்துவது சிரமம். அப்படியிருக்க ஓர் பெண், அதிலும் அரசனுடைய முதல் மனைவி பெருங்கூட்டமாக பலதேச வேந்தரும் பிறரும் கூடியிருக்குமிடத்தில் அவர்கள் காண ஓர் குதிரையை மூன்று வீச்சில் மிகவும் உத்சாகத்துடன் வெட்டி வீழ்த்தினாள் என்பது மனத்தினாலும் எண்ண முடியாதபடி அருவருக்கத்தக்க செய்கையாக உள்ளது. அப்படியானால், அப்பெண்ணின் மனோபாவங்கள் எப்படியிருந்திருக்கவேண்டும். மேலும் அவ்வாறு வெட்டிக் கொன்ற குதிரையோடு ஓர்நாளிரவு முழுதும் கலங்கா நெஞ்சோடும் கட்டித் தழுவிக் கூடியிருந்தாளென்பதும் சாதாரணப் பெண்களால் செய்யக்கூடாத செயலாகவே யிருக்கின்றது. மனிதர்கள் செயலுக்கு அப்பாற்பட்டதாய் உள்ளது. இவ்வாறு கூடியிருந்ததும் தனியாகவுமல்ல; பல நாட்டு முடிவேந்தர் நடுவில் அமைத்திருந்த பந்தலிலேயே. இதற்குமேல் ஆராயத் தகுந்தது, தசரதன் ராஜபத்தினிகளை ருத்விக்குகளிடம் ஒப்புவித்தும் அவர்கள் அப்பெண்களைக் கூடிச் சடங்கு நடத்தியதுமே. அதன் பின்னர் அப்பெண்கள் அரசனிடம் ஒப்புவிக்கப்பெறுகின்றனர்.

இதனால் ஆரியர் தங்கள் குடும்ப விருத்திக்காக இந்த யாகத்தை வைத்திருக்கின்றனரென்பது தெளிவாகிறது. "புத்திரருண்டாகச் செய்ய வல்லவரான ருசியசிருங்கன் முதலியோர் சேர்க்கை பிரசாதத்தால் அப்பெண்கள் பிள்ளைகளை அடைகிறார்கள். இதன்மேல் நிகழ்ந்ததை ஆராய்வோம்.

அத்வர்யு அந்தச் செத்தக் குதிரையின் வபையை இழுத்து எடுத்து அக்கினியில் நன்றாகப் பாகம் பண்ணினான். தசரதன் அவ்வாறு பாகம் பண்ணப்பட்டபோது கிளம்பிய அவ்வபைப் புகையை மோந்து பார்த்து நின்றான். பின் அக்குதிரையின் பிற அவயவங்களெல்லாம் தீயில் பாகம் செய்யப்பெற்றன. பின் தானத்தோடு யாகம் முடிவடைகிறது.

இதனால் ஆரியர்கள் கணக்கிறந்த மிருகங்களையும், பாம்புகளையும், பறவைகளையும், ஆமை முதலிய நீர் வாழ்பவைகளையும் கொண்டு வந்து கட்டி வெட்டித் தீயில் நன்றாகப் பாகம் பண்ணி உண்டுவந்தது தெளிவாகிறது. குதிரை முதலிய மிருகங்களை உண்டதோடு நில்லாது பாம்பு, ஆமை முதலியவைகளையும் வதக்கி உண்டனரென்பதே மிகவும் ஆச்சரியமாக இருக்கின்றது.

மேலே கண்ட வேள்விச் செயல்களெல்லாம் தமிழ் மக்களால் மிகவும் அருவருத்துத் தள்ளப்பெற்றவை. இராம கதையைத் தமிழில் பாடிவந்த கம்பர் தமிழ் மகனாகையால் இவைகளைக் கண்டு வெறுப்படைந்து திகைத்து வருந்தி கேவலமான "இவ்வாலாற்றைப் பாடுவதால் தம்மைத் தமிழுலகத்தார் உண்மை தெரிந்தபோது இகழ்வர்; மாசும் வந்தடையும்" என்றும் புலம்பியுள்ளார். அதனால் அவர் என்ன செய்தார்? இவ்விழிவான யாக வரலாற்றை முழுவதும் மறைத்துவிட்டார். அவர் பாடல்கள் பின்வருவன:—

(கலைக்கோட்டு முனிவன் தசரதனை நோக்கி)

'என்றன பற்பல இனிமை கூறிநற்
குன்றுறழ் வரிசிலைக் குலவுத் தோளினாய்
நன்றிகொள் அரிமக நடத்த எண்ணியே
இன்றெனை அழைத்ததென் இயம்புவாய்" என்றான்.

"உலப்பில் பல்லாண்டெலாம் உறுகண் இன்றியே
தலைப்பொறை ஆற்றினென் தநயர் வந்திலர்

அலப்புநீர் உடுத்தபார் அளிக்கு மைந்தரை
நலப் புகழ்பெற இனிநல்கல் வேண்டுமால்."

"என்றலும் அரசநீ இரங்கல் இவ்வுல
கொன்றுமோ உலகமீ ரேழு மோம்பிடும்
வன்றியன் மைந்தரை அளிக்கு மாமகம்
இன்றுநீ இயற்றுதற் கெழுகாண் டென்றான்."

(பின் யாகசாலையிற் புகுந்து கலைக்கோட்டு மாமுனி தீவளர்த்து ஆகுதி வழங்கினான். உடனே பூதமொன்று தீயினின்றெழுந்தது.)

இவ்வாறு கம்பர் கூறும் வரலாறு வால்மீகி ராமாயணத்தில் பதினைந்தாவது சருக்கத்தில் கூறப்படுகிறது. ஆதலின் பெருங்கவி கம்பர் வால்மீகி முனிவர் கூறும் அசுவமேத வரலாற்றை அறிந்திலரா எனின் அவர் கூறுவது முதலில் அவ்வாறு நினைக்கும்படிதான் உள்ளது. முதலில் அசுவமேதம் செய்ய என்னை அழைத்தாயாவென்று தசரதனிடம் கலைக்கோட்டுமுனி கேட்டதாகவும் அவன் அவ்வாறே கூறியதாகவும் உடனே கலைக்கோட்டு முனி புத்திரகாமேட்டி யாகம் செய்ததாகவும் பூதம் தோன்றியதாகவுமே கம்பர் கூறுகிறார். இதனால் கம்பர் தமது நூலில் அசுவமேதத்தைப் புத்திரகாமேட்டியென மயங்கி எழுதியிருக்கவேண்டும். அல்லது அசுவமேதம் தமிழ் மக்களுக்கு மிகவும் அருவருப்பாக இருக்குமென்று அதனை எழுதாது மறைத்திருக்கவேண்டும்.

பூதம் தோன்றித் தந்த பாயசத்தை தசரதன் தன் மனைவியர் மூவருக்கும் பங்கிட்டுக் கொடுத்தானென்று கூறிய பின்னர் கம்பர்:

"வாம்பரி வேள்வியும் மகவை நல்குவ,
தாம்பரை ஆகுதி பிறவும் அந்தணன்
ஓம்பிட முடித்தபின் உலகு காவலன்
ஏம்பலொ டெழுந்தனன் யாரு மேத்தவே."

என்று கூறுகிறார். இதனால் அசுவமேத யாகம் செய்தபின் புத்திரகாமேட்டியும் செய்தனன் தசரதன் என்பதையும் அசுவமேதம் வேறு புத்திரகாமேட்டி வேறு என்பதையும் கம்பர் நன்றாக உணர்ந்தவர் என்பது புலனாகிறது. ஆதலால் கம்பர் பரிவேள்வியின் ஆபாசங்களைத் தமிழர் உணர்ந்தால் தமது கதையை மதியார் என்பதை

உணர்ந்தே அதை முற்றிலும் கூறுது விடுத்தார் என்றுதான் கொள்ள வேண்டியிருக்கிறது. இவருக்கு வால்மீகி ராமாயணத்தை மொழி பெயர்த்துரைத்தோர் இவ்வசுவமேத யாக வரலாற்றைக் கூறுது விடுத்தனரோ என்று ஐயுறவும் இடமில்லே. ஏனெனில் அந்நோக்க முடையோர் பரிவேள்வி செய்தான் என்ற அளவில்கூட பரிவேள் விப் பெயரையே கூறியிருக்கமாட்டார்கள்.

இராமாயணக் கதையைப் படிப்போர் இதனே நன்கு கவனிக்க வேண்டும். பலன் கருதி இக்கதையைப் படிப்போர் வால்மீகி முனி வர் கூறும் உண்மைக் கதையை மறைத்து வேறுவிதமாகக் கதையை மாற்றி எழுதும் கம்ப ராமாயணத்தைப் படிப்பதால் அவர்கள் விரும் பும் பலன் விளேயாதென்பதை உணர்வாராக. அதோடு உண்மைக்கு மாறுன வரலாற்றைப் படித்துக் கேட்பதால் வரும் பாவத்துக்கும் ஆளாவதுண்மை. ஆதலின் கம்ப ராமாயணத்தை அவர்கள் படியா மல் உண்மை வரலாருகிய வால்மீகி ராமாயணத்தை படிக்கக் கடவர். இச்சொல் ஆரியருள் கம்ப ராமாயணத்தைப் படிப்போருக்கே. தமி ழரோ பிற்காலத்தில் உண்மையறியும்போது தம்மை இகழ்வரென உணர்ந்த கம்பர் தம்மவர் சிறந்த வரலாறு பல மலிந்து கிடப்பவும் அவைகளேப் பாடாமல் அந்நியராகிய ஆரியர் வரலாற்றைப் பாடிய தோடு உண்மையை உரைக்காமல் பலவற்றை மறைத்தும் மாற்றியும் எழுதியிருப்பதனுல் வால்மீகி ராமாயணத்தையும் படித்து உண்மை யறியக் கடவர்.

ஆனுல் கம்பர் ஒரு வகையில் தமது கடமையையும் மறந்தார். அவர் வாழ்ந்த காலத்தில் ஆரியர் ஆதிக்கம் மிகுந்திருந்ததுபோலும்! அதனுலேயே அவர்களால் வற்புறுத்தப்பட்டு அவர்கள் அதிகாரத் துக்கும் செல்வாக்குக்கும் அஞ்சியோ அல்லது அவர்களிடையும் புகழ் பெறும் அவாவினுலோ இதனே அவர் பாடியிருக்கவேண்டும். கம்பர் பரிவேள்வியையும் மகப்பேற்று வேள்வியையும் தசரதன் செய்ததாகக் குறித்துவிட்டு பரிவேள்வியின் விவரத்தை எழுதா திருப்பதினுல் அதைப் படிப்போருக்கு அதன் விவரத்தை அறிய ஆவல் எழும். உடன் அவர்கள் வால்மீகியைப் பார்த்துத் தெரிந்து கொள்வார்கள் என்று எண்ணியே அவர் பரிவேள்வியும் செய்யப் பெற்றது என எழுதுகிருர். தமிழ் மகனுகிய அவருக்குத் தாம்

பாடும் நூலில் இவ்வசுவமேத ஆபாசங்கள் இடம்பெறவேண்டா மென்று ஒருவேளை அவைகளை அவர் எழுதாது விட்டிருக்கலாம்.

---

## நான்காம் அத்தியாயம்.

மேலே அயோத்தியாபுரியிலே தசரத மன்னவனுடைய முயற்சியினாலே செய்யப்பெற்ற அசுவமேத யாகத்திலே யாவரும் கூடி சோமக் கொடியின் சாறுகிய கள்ளைக்குடித்து குதிரை பாம்பு ஆமை முதலியவைகளை வேள்வியிலே பாகம் செய்து உண்டு மகிழ்ந்தனர். யாகமும் நிறைவேறிற்று.

பின் பிள்ளைப் பேற்று வேள்வி செய்யப்பெறுகிறது. தீயினின்றும் ஒரு பூதம் தோன்றிப் பாயசம் தருகிறது. அதை தசாதன் மனைவியருக்குப் பகிர்ந்து தருகிறான். திருமால் தம்மை நான்கு கூறுக்கிக்கொண்டு தம்மில் பாதியாகிய ஒருகூறு கோசலை வயிற்றிலும் தம்மில் கால்பாகமாகிய ஒரு கூறு கைகேயி வயிற்றிலும், தம்மில் மிந்த பாகமாகிய இரண்டு கூறுகள் சுமத்திரை வயிற்றிலுமாகப் புகவே கருநிறைவுற்று பின் கோசலை இராமனையும், கைகேயி பரதனையும், சுமத்திரை இலக்குமணனையும், சத்துருக்கனையும், பெற்றனர். இவர்கள் நால்வருமே திருமாலின் தோற்றமானவர். உலகினர்கருதுமாறு இராமன் மட்டுமே திருமாலின் பிறப்பெனக்கொள்வதுதவறு.

அறுபதினாயிரம் ஆண்டுகள் ஆண்டபின்னரே தசரதன் இவ்வேள்வியை இயற்றினன். கம்பரும் இதனையே பால காண்டம் திருவவதாரப் படலத்தில் தசாதன்கூற்றாக,

> "அறுபதினாயிர மாண்டு மாண்டுற
> உறுபகை யொடிக்கியிவ் வுலகை யோம்பினேன்"

என்று கூறுகின்றனர். இதனால் அப்போது தசரதனுக்கு அறுபதினாயிரம் ஆண்டுகளுக்கு மேலாகவே வயதிருக்க வேண்டும். அதன்பின்னரே இராமன் முதலிய நால்வரும்பிறந்திருக்கவேண்டும் இது சம்புத்தமானதாக இல்லை. இந்த தசரதன் இவ்வளவு காலம் உலகில் வாழ்வதற்கு என்னதவம் செய்தனனோ? யாரிடம் வரம்

பெற்றனனே? தெரியவில்லை. இவனுடைய மனைவியாகிய கோசலை கைகேயி, சுமித்திரை முதலியவருக்கும் குறைந்தது அறுபதினுயிரம் வயதாவது இருக்கவேண்டும். பதினுயிரம் ஆண்டுகள் ஆண்ட பின்னர் இவர்களைத் தசாதன் மணந்து கொண்டானென்று கொண்டாலும் இவர்களுக்குக்குறைந்ததுஐம்பதினுயிரம்வயதாவதுஆகியிருக்க வேண்டும். இப்பெண்மணிகள் இவ்வளவு காலம் உயிர்வாழ என்ன தவம் செய்து எவரிடம் என்ன வரம் பெற்றனரோ? தெரியவில்லை. இவ்வளவு வயதான கிழவிகள் எவ்வாறு கருத்தரித்தனரோ? இதுவும் விந்தையே!

தற்காலத்தில் பெண்கள் ஐம்பது வயது வரையில் பிள்ளை பெறுகின்றனர். அதன்மேல் அவர்களுக்குக் கருத்தரிக்கும் தன்மை அற்றுப்போகின்றது. இந்த இராம கதை நிகழ்ந்த காலத்தில் பெண்கள் ஐந்நூறு அல்லது ஐயாயிரம்வயதுவரை கருத்தரித்தனர் என்று சொன்னுலும் ஒருவாறு பொருந்தும் பொய்யாகும். ஆனல் இந்தக் கௌசலை முதலிய பெண்களோ ஐம்பதினுயிரம் வயது சென்றபின்னர் கருத்தரித்தனர் என்று சொல்வது பொய்யுலகமும் ஒப்ப முடியாததாக இருக்கின்றது. இருந்தாலும் அறுபதினுயிரமாண்டுகடந்த இப்பெண்கள் இராமன் முதலிய நால்வரைப் பெற்றன ரெனவே வால்மீகி முனிவரும் கம்பரும் கூறுகின்றனர், இவ்வாரியப் புரளியை என்னென்பது.

தான் வெட்டிக்கொன்ற குதிரையை ஓர்நாள் இரவு முழுவதும் கட்டித் தழுவியிருந்த கோசலையும் ஏனைக் கைகேசி சுமித்திரையும் பிள்ளையை உண்டாக்கவல்ல கலைக்கோட்டு முனி முதலிய ரித்விக்குகளின் சேர்க்கையில் கருவுற்றனர். அதை மறைத்தற்காகவே பாயச வேள்வியும் செய்யப்பட்டது போலும், உண்மையிவ்வாறிருப்பவும் கம்பர் பாயசத்தை உண்டதனுலேயே கௌசலை யாதியர் கருவுற்றனர் என்று குறித்திருக்கிறுர். உயரிய அறிவினராம் கம்பர் இயற்கைக்கு மாருக யிவ்வாறு குறித்ததேன்? இயற்கைக்கு மாறும் செய்தியைக் கம்பர் குறித்ததால் யிதன் உண்மைதானென்னே என்று நுண்மாண் புலனுடையார் துருவிச் சென்று வால்மீகியை படித்து உண்மை தெரிந்து கொள்ளட்டும் என்று கருதிப்போலும் இவ்வாறு குறித்தனர்.

தசாதனுக்கு பட்ட மனைவியர் மூவரைத் தவிர வேறு அறுபதி னுயிரம் மனைவியருமுண்டு, இவர்களை தசரதன் தன்னைக்கொல்ல வந்த பாசுராமனிடமிருந்து தப்பும் பொருட்டு மணந்தனனெனக் கூறுவர். இது எம்மட்டுமுண்மை என்பதைப் பின்னர் ஆராய் வோம். காரணம் எதுவாயிருந்தாலும் தசாதனுக்கு அறுபதினுயிா மனைவியரிருந்தன ரென்பது கதையின்படி உண்மையே.

அரசனேஇவ்வாறு அறுபதினுயிரம் காமக்கிழத்தியரைக்கொண் டிருந்தானென்றால் அவன் நாட்டிலிருந்த குடி மக்களின் ஒழுக்கநிலை எவ்வாறிருந்திருக்குமோ? அண்ணுவி நின்றுகொண்டிருந்தால் பிள் ளைகள் ஓடிக்கொண்டன்றோ நீர் கழிப்பார். தசாதன் தான் ஒருவன் வாழவேண்டிப் பேடித்தனமாக அறுபதினுயிரம் பெண் மக்களின் நல்வாழ்வைக் கெடுத்தானே; ஐயோ! பெருங் கொடும் பாவம், உல கினர் இரண்டு பெண்டாட்டிக்காரனுக்கு கொண்டை யென்னத்திற் கடி கொண்டை என்பர். ஒரு மனைவியைக்கொண்டு காலங் கழிப் பது மிகவும் கடினமாக இருக்கிறதனுல் அறிவுடைய நன் மக்கள் இரண்டாமுறை மணக்கவேண்டுமென்று கனவிலும் மறந்து நினை யார். இரண்டு பெண்டாட்டியால் உண்டாம் திண்டாட்டமே மிகக் கொடியது. ஒருவன் அறுபதினுயிரத்து மூன்று மனைவியரை வைத் திருந்தானென்பது கேட்கக்கூட மிகவும் அச்சத்தையும் அருவருப் பையும் தருகின்றதன்றோ? அந்தோ பரிதாபம்! அறுபதினுயிரத்து மூவருக்கு ஒருவன் கணவனென்றால் அவர்கள் ஒவ்வொருவரையும் கவனிக்குமிடத்து அவன் இருந்தும் இறந்தவனே யாவனல்லவா? அவர்கள் என்ன தாசி என்னப்பட்டவரோ? பாவம்! பாவம்!! நிற்க கோசலையாதியருக்குப் பிறந்த நான்குபிள்ளைகளும் நன்ருகவளர்ந்து வருவாராயினர். அவர்களில் இராமனுக்குத் துணையாக இலக்குவ னும், பாதனுக்குத் துணையாகச் சத்துருக்கனும் இணைபிரியாதிருந்து வந்தனர். இவர்கள் கல்வி பயின்று பதினாட்டைப் பிராயத்த ராயினர். அதுகண்ட தசாதன் அவர்களுக்குத் திருமணத்தைச் சிந்தித்தான்.

அமைச்சரோடும் திருமணஞ் சிந்தித்திருந்த தசாதனை காதி மகனுன விசுவாமித்திா முனிவன் வந்து கண்டான். அவன் மன்னனை நோக்கி இராமனைத் தன்னுடன் பத்து நாளைக்கு அனுப்பி

தான் செய்யும் வேள்வியைக் காக்கவேண்டுமென வேண்டினன். உடனே மன்னவன் நினைவிழந்து ஓ முனிவரே! யான் பிறந்து அறுபதினுயிரம் ஆண்டுகள்சென்று இந்த இராமனை அருமையாகப் பெற்றேன்; எனது பிள்ளைகள் நால்வருள்ளும் இராமனிடத்தில் எனக்குப் பேராசை பெருகிவிட்டது. ஆதலால் அவனை அழைத்துக்கொண்டு போகவேண்டாம். உம்மை வருத்தும் அரக்கர் யாவர்; "எனப் புகன்றனன். உடனே விசுவாமித்திரன்'' புலத்திய மாமுனி குலத்தினனான இராவணனென்று ஓர் அரக்கனிருக்கிறான். அவன் மாரீசன் சுபாகு என்ற இரண்டு அரக்கரையனுப்பி வேள்விகளைக் கெடுக்கிறான்'' என்று கூறினன். அது கேட்ட மன்னன் "அந்த இராவணன் முன் நின்று போர் செய்ய யான் வல்லவனல்லேன். தேவர்கள் கந்தர்வர்கள் இயக்கர்கள் முதலியோரும் கூட இராவணனேடு போர் செய்ய வல்லமை யில்லாதிருக்க மானிடர்கள் எவ்வளவு? அவனே மிக்க வல்லமை பெற்றவர்களின் வல்லமையையும் போர் தன்னில் அடக்கிவிடுகிறான். அவனேடாவது அவனுடைய படைகளோடாவது போர் செய்ய என்னுல் முடியாது. யான் எனது படைகளைக் கூட்டிவந்தாலும் முடியாது. எனது மக்களோடு கூடி வந்தாலும் முடியாது. ஆதலின் சிறு குழந்தையான இராமனை நீர் என்ன பாடு பட்டாலும் கொடுக்கவே மாட்டேன். உமது யாகத்தை அழிக்கவந்துள்ள சுபாகுமாரீசரோ மிகவல்லமை பெற்றவர்கள் ஆதலால் வேண்டுமானுல் நான் அவர்களுள் ஒருவனேடு போர் செய்ய வருகிறேன்'' என்று கெஞ்சினுன்.

அப்போது முனிவர் சினமிகக்கொண்டார். இதுவரை நிகழ்ச்சி வால்மீகி இராமாயணம் பாலகாண்டம் இருபதாவது சருக்கத்திலுள்ளது. அதனுலே கேடுவிளையுமென அறிந்த வசிட்டமுனி மன்னனுக்குத் தேறுதல்சொல்லி இராமனை அனுப்புமாறு ஏவினன். அது கேட்ட மன்னனும் இராமனை முனிவனுடனனுப்ப இசைந்தனன்.

விசுவாமித்திர முனிவன் முன்னுலே செல்ல பின்னுல் இராமனும் இலக்குவனும் அவனைத்தொடர்ந்து காடுநோக்கிச் சென்றனர். அவர்கள் சரயு நதிக்கரையை யடைந்தபோது முனிவன் அவர்களுக்கு பலை அதிபலை என்ற வித்தைகளைக் கற்றுக்கொடுக்கின்றனன். அன்றிரவு அக்குழந்தைகள் சிறகுகளாலாகிய படுக்கையில் துயின்ற

னர். அவர்களை விடிந்ததும் முனிவன் விடிந்து விட்டது; எழுந் திருங்கள் என்று சத்தமிட்டழைத்து எழுப்பினன்.

---

## ஐந்தாம் அத்தியாயம்.

---

விசுவாமித்திர முனிவனும் அரசகுமாரரும் வழிநடந்து கங்கைக் கரையையடைந்து அங்கிருந்த முனிவர்களால் நல்வரவேற்கப்பெற்று அவர்களோடு ஓரிரவைக் கழித்து, தோணியேறி ஆற்றைக் கடந்து தென் கரையைச் சேர்ந்து மெல்ல மெல்ல நடந்துபோனார்கள். அங்கே மனித வாழ்வற்ற ஓர் கொடிய காடு குறுக்கிட்டது. அது கண்டு இராமன் அக்காடு என் அவ்வாறிருந்ததென முனிவனைக் கேட்டான். அதற்கு மறுமொழியாக விசுவாமித்திரன் "விருத் திராசுரனைக் கொன்றதால் இந்திரனுக்குநேர்ந்த பெரும்பழியை இவ் விடம் நீக்கியதால் மிகவும் செழிப்பான நாடாக இருந்தது. தாடகை என்னும் இயக்கப் பெண் இவ்விடத்தில் வந்து இங்கு வாழ்பவர்களை யெல்லாம் துன்புறுத்துகிறாள். அதனாலேயே இவ்விடம் இவ்வாறு பாழாயிற்று. அவள் இங்கேதான் வாழ்கின்றாள். அவள் புத்திமானான சுந்தனுக்கு மனைவியானாள். அவள் நினைத்தபடியே ரூபங்கொள்ள வல் லவளும் ஆயிரயானை பலமுள்ளவளுமாய்ப் பிறந்தாள். அவளுக்கு மாரீ சன் என்னும் இராக்கதப் பிள்ளை பிறந்தான். மாரீசன் இந்திரனை நிகர் த்த வலியுள்ளவன். அவனும் மனிதர்களைத் துன்பப்படுத்துகிறான்." என்று கூறினன். தாடகையின் வரலாற்றை விபரமாகக் கூறும்படி இராமன் கேட்க மறுபடியும் முனிவன் "சுகேது என்ற பெய ருடைய ஒரு பெரிய இயக்கன் இருந்தான். அவன் நல்லொழுக்க முள்ளவன். அவனுக்குக் குழந்தையில்லாமல் பெருந்தவம் புரிந்து நான்முகனுடைய வரத்தால் இப்பெண் தாடகை பிறந்தனள்.

அவளைச் சுந்தனென்பவன் மணந்தான். அவர்களுக்கு மாரீ சன் பிறந்தான். சுந்தன் அகஸ்திய முனிவரால் சபிக்கப்பெற் றிறந்தான். அவரைக் கொல்லுவதற்காகத் தாடகை மாரீசனை யழைத்துக்கொண்டு வந்தாள். அவள் ஓடிவருவது கண்டு அகத்தியர் மிகச் சினந்து அவள் மனிதரைத் தின்பவளாய் விகார ரூபமுடைய

வளாய் இந்த உரு ஒழிந்து அகோரமான உருவுடையவளாகவேண்டும் என்று வெவ்வுரை கூறினர். உடனே அவள் அவ்வாறே ஆகி இந்த காட்டைப் பாழ் செய்கிறுள். இயக்கர்களுக்கு இயல்பில் பலமில்லையானலும் வரத்தால் பலம் பெற்ற இக்கொடியவளாகிய தாடகையை நீயே கொல்லவேண்டும். பெண்ணைக் கொல்லவேண்டுமென்று நீ அருவருப்புக் கொள்ளவேண்டாம். முன்பொரு காலம் விரோசனனென்பவனுடைய மகளாகியமந்தரைகெட்டவளாயிருந்ததால் அவளை இந்திரன் கொன்ருன். மற்ருெரு காலத்தில் பிருகுவுக்கு மனைவியும் சுக்கிரனுக்குத் தாயுமான ஒரு பெண்ணை அவள் உலகில் இந்திரனை இல்லாமற் செய்துவிடவேண்டுமென்று எண்ணினதால் திருமாலே கொன்ருர். இப்படியே நல்லோரநேகர் தீநெறி யொழுகும் பெண்களைக் கொன்றிருக்கின்றனர். ஆதலின் நீ இவளைக் கட்டாயம் கொன்றுவிடவேண்டும்" என்று கூறினர். இராமனும் அக் கொலையைச் செய்ய உடன்பட்டனன். உடனே அவன் வில்லை நாணேற்றி ஆரவாரஞ் செய்தனன். அவ்வாரவாரத்தைக் கேட்ட தாடகை அங்கே வந்தனள். இராமன் தம்பியைப்பார்த்து "இலக்குவ! இவளைப் பார்த்தாயா? இவளைக் கண்டு அஞ்சா நெஞ்சினரும் கலங்குவர். வெல்ல முடியாதவளாயுள்ள இவளை இப்போது காதையும் நுனி மூக்கையும் அறுத்துத் தூக்கிவிடுகிறேன் பார். இவள் பெண்ணாயிருப்பதால் இவளைக் கொல்ல எனக்கு மனம் வரவில்லை ஆதலால் இவளைக்கைகால்களை முறித்து பலமில்லாமற்செய்ய நினைக்கிறேன்" என்றனன். தாடகை கல்லெறிந்து சண்டை செய்தாள். இராமன் அவள் கைகளை அறுத்துத் தள்ளினன். அப்போது இலக்குவன் அவளது காதுகளையும் மூக்கு நுனியையும் அறுத்துவிட்டனன். பின் இராமன் ஓர் அம்பெய்து அவளைக் கொன்றனன். (இவ்வாலாறு வால்மீகி—பாலகாண்டம் இருபத்தாறும் சருக்கத்திலுள்ளது.)

அன்றிரவு அவர்கள் அங்கே தங்கி மறுநாள் அங்கிருந்து புறப்பட்டு விசுவாமித்திரனுடைய ஆச்சிரமத்தை அடைந்தனர். அங்கே போனவுடன் இராமன் அவ்வாசிரம வரலாற்றை வினவ விசுவாமித்திரன் கூறுகிறுன். "திருமால் இவ்விடத்தில் தவம் செய்துகொண்டிருந்தார். அப்போது விரோசனனுடைய மகன் பலி என்னும் அரசன் இந்திரனை வென்று மூவுலகங்களும் போற்ற ஆண்டனன்.

அச்சக்கிரவர்த்தி ஒரு பெரிய யாகம் செய்யத்தொடங்கினன். தன்னிடம் வந்து யாசிக்கிறவர்களுக்கெல்லாம் அவரவர்கள் கேட்டது கேட்டபடி கொடுத்தான் இச்செய்தியை தேவர்களோடு இந்திரன் திருமாலிடம் கூறி மகாபலியைக் கொல்லவேண்டினன் திருமால் அதற்கிசைந்து தாம் பிறக்கும்படி தம்மிடம் வரம்பெற்றிருந்த காசியப முனிவனுக்கும் அதிதிக்கும் பிள்ளையாகப் பிறந்து குள்ள உருவத்தோடு பலியிடம் சென்று மானத்தைவிட்டு மூவடியிரந்து பெற்றுக்கொண்டு பலிச் சக்கிரவர்த்தியை யடக்கினர், அவ்வாமனர் தங்கிய ஆச்சிரமம் இது. இதில் நான் வாழ்கிறேனென்றனன். (இவ்வரலாறு வால்மீகி பாலகாண்டம் இருபத்தொன்பதாவது சருக்கத்திலுள்ளது.)

கோசிகமுனி யாகம் தொடங்கினன். ஐந்து நாட்கள் சென்றன. ஆறும் நாள் சுபாகுவும் மாரீசனும் யாகத்தைக் கெடுக்கவந்தனர். அவர்களில் மாரீசனை ஓர் கணையால் கடலிலே தள்ளும்படி செய்தான் இராமன். மற்றொரு கணையால் சுபாகு மாண்டனன். யாகம் இனிது நிறைவேறிற்று. பின் முனிவன் இராம லக்குவரை யழைத்துக்கொண்டு மிதிலையை நோக்கி நடந்தனன்.

மேலே காணப்படும் வரலாற்றை சிறிது ஆராய்வோம். தாடகை ஓர் பெண். இவளுடைய மகனே மாரீசன். அவன் இராவணனுக்கு மாமன் முறை. இராவணன் பிறந்து வரம்பெற்று இலங்கையில் அரசாளத் தொடங்கியபோது கிழவனாகிய மாரீசன் அவனை அழைத்து அவனுடைய ஆதரவைப் பெற்று முனிவர்கள் செய்த யாகங்களை சுபாகு என்பவனோடு கூடி அழித்து வந்தான், ஆதலின் இராவணன் வயதளவாவது அவனுக்கு ஆகியிருக்கவேண்டும். இராவணன் முக்கோடி ஆண்டு வாழ்நாள்வரம் பெற்றவன். அவன் தாடகைபிறந்த பதினான்காவது ஆண்டில் இறக்கிறானெனத் தெரிவதால் அப்போது இராவணன் பிறந்து கிட்டத்தட்ட மூன்று கோடி ஆண்டுகள் ஆயின. ஆதலின் மாரீசனுக்கும் அப்போது மூன்று கோடி ஆண்டுகளுக்கு அதிகமாகவே ஆகியிருக்கவேண்டும். அவனுடைய தாயாகிய தாடகையைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமோ?

இராவணன் தான் பெற்ற வரத்தின் மகிமையால் அவ்வளவு காலம் வாழ்ந்து வந்தனன். மாரீசன் யாரிடம் இவ்வளவு காலம்

வாழ வரம் பெற்ருனே தெரியவில்லை. இதற்கும் மேலாக அவன் தாய் தாடகை யாரிடம் நீண்ட வாழ்நாள் பெற்றனளோ? மாரீச னும் தாடகையும் இவ்வளவு காலம் வாழ வரம் பெற்ற வரலாறென் றும் காணப்படவில்லை. ஆதலின் இவர்களுடைய இவ்வாழ்க்கையும் அழிவும் அறிவுக்கு உடன்படுமாறில்லை. இருந்தாலும் இவை புலவர் களால் எழுதிவைக்கப்பெற்றுள்ளன. இதன் காரணத்தைப் பின் னர் ஆராய்வோம்,

தாடகையின் தந்தையாகிய சுகேது மிகவும் நல்லவன் என்று வால்மீகி முனிவர் கூறுகிருர் கம்பரும் அவ்வாறே "சுகேது வென் றுளனோர் தூய்மையான்" என்று கூறுகிருர். இவன் தவங்கிடந்து பெற்ற பெண்ணே தாடகை. இவளை புத்திமானுன சுந்தனுக்கு வாழ்க்கைத்துணைவியாக சுகேது தருகிருன். சுந்தன் ஒரு இயக்கர் தலைவன் இயக்கர்கள் பொதுவாக பலமற்றவர்கள். சுந்தனைச் சிறந்த அறிவாளியென வால்மீகிகூறுகிருர். இவன் அகத்திய முனிவர் சாபத்தால் இறந்திருனென்பதால் அவருடைய சாபம் பெறுவதற்கு அவருக்கு அவன் பெருந் தீங்கு செய்திருக்கவேண்டும். ஆனுல் வால் மீகி அதுபற்றி ஒன்றும் கூறுகின்றிலர். அவர் சபித்தார் இவன் இறந்தான் என்று மட்டுமே கூறுகிருர்.

சுந்தன் சிறந்த புத்திமானுனதால் முனிவர் சாபத்தைப் பெறு மாறு அவருக்கு அவன் என்ன கெடுதியைச் செய்திருக்கக்கூடும். மேலும் அவனே இயற்கையில் பலமில்லாதவன். நல்லொழுக்க முடையவனுகிய சுகேதுவின் மாப்பிள்ளை. கம்பரோ சுந்தனுடைய குணத்தை மாற்றி அவனைக் "காய் சினத்தாக்கன்" என்கிருர். மேலும் இவன் அகத்தியரால் இறப்பதற்கு ஓர் காரணமும் கூறுகிருர். அதாவது சுந்தன் அகத்தியர் வாழ்விடமடைந்து அங்கிருந்த மாங் கனியெல்லாம் பறித்து வீசினுன். அதனுல் சினமிகக்கொண்டு முனி வர் "தழலெழ விழித்தனர். சாம்பராயினன்" என்பதே. இவ்வா லாற்றல் அகத்தியர் அற்ப குணமுடையவராகக் காட்டப்படுகிருர். புத்திமானுன சுந்தன் என்று முதலில் கூறிய வால்மீகி அதற்கு மாருக அவனை அறிவில்லாதவனுகக் கூருமல் காட்டுகிருர். ஓர் கார ணமும் கூறாது அவனை அகத்தியர் கொல்வதாகக் கூறி அகத்திய ருக்கு ஓர் பெருங் குணக்கேட்டை யேற்றுகிருர். அகத்தியரோ

தமிழ் முனிவர். இவரே தமிழுக்கு சிவபெருமான் திருவருளைப் பெற்று முதன் முதல் இலக்கணமியற்றியவர். ஒல்காப்பெரும் புகழ் தொல்காப்பியர் முதலிய சிறந்த தமிழ்ப் புலவர்களுக்கு ஆசிரியர். இந்தத் தமிழ் முனியைக் குணக்கேடாக அறிவுடையவருக்குக் காட்டவே ஆரியராகிய வால்மீகி இவ்வாறு எழுதினர்போலும் கம்பர் வால்மீகி கூறாத காரணத்தைக் கூறுகிறார். அதுவும் வியப்பாகவே இருக்கிறது. மரங்களை முறித்தெறிந்ததற்காக ஒருவனை விழித்துச் சாம்பராக்குவதென்றால் அவர் தம் பெருந் தன்மையும் பெருந் தவமும் இருந்தவாறென்னே? ஈதெல்லாம் பெருந் தமிழ்ப் புலவராகிய அகத்தியனார் பாலிருந்த அழுக்காற்றால் ஆரியர் கட்டிய கதையென்றே தள்ளுதல் வேண்டும்.

தாடகைக்கு ஒரே மகன், அவன் மாரீசன் 'சுபாகு என்பவன் வேறொரு அரக்கன். அவன் மாரீசனோடு கூடி இராவணன் ஆணையால் வேள்விகளைக் கெடுத்து வந்தான். இவனைக் கம்பர் தாடகையின் மகன் என்றார். இது வால்மீகி கூற்றுக்கு முற்றிலும் மாறுபட்டிருக்கிறது, சுந்தன் இறந்தது தெரிந்து தாடகை ஓடி வருகிறாள். அகத்தியரைக் கொல்ல மாரீசனும் உடன் வருகிறான். அதுகண்டு அகத்தியர் இயல்பில் பலமில்லா இயக்கனாகிய அவனை மிகுந்த பலமுள்ள அரக்கனாகுமாறு சபிக்கிறார். அவ்வாறே இயல்பில் ஆயிர யானை பலமுடைய தாடகையை மிகுந்த பலமுள்ள அரக்கியாகுமாறு சபிக்கிறார். எதிரிக்குப் பலமழியுமாறு சபிப்பதே அறிவுடையார் செய்கை. மிகு பலம் வாய்க்குமாறு அகத்தியர் சபித்தாரென்பது அறிவுடையார் ஒப்புமாறில்லை. இது வேண்டுமென்றே அவர்மீது அறியாமையேற்றச் செய்ததாகும். மேலும் மரங்களை முறித்தெறிந்த ஒருவனைச் சாம்பராக்கிக் கொன்ற முனிவர் தம்மையே கொல்ல வந்தவர்களைக் கொல்லாது விடுகின்றார் என்பதும் வியப்பே. அகத்தியர் சாபத்தால் மிக பலம்பெற்ற தாடகை, அகத்தியர் வாழ்ந்த வனத்தில் அதுமுதல் வாழ்ந்து அதனைப் பாழாக்கி வந்தாளென வால்மீகி கூறுகிறார். இதனால் தம் தலையில் தாமே மண்ணைவாரிப் போட்டுக்கொண்ட அகத்தியர் அவ்விடம்விட்டு வேறிடம் புகுந்தவராதல்வேண்டும் என்னே ஆரியக்கூத்து? 'இன்னா' செய்தாரை ஒறுத்தல் அவர் நாண நன்னயஞ் செய்துவிடல்" என்ற சீரிய கொள்கை

யுடைய தமிழ் மக்களிற்றலைசிறந்த முனிவராகிய அகத்தியனா இவ்வாறு நடந்திருப்பார்? பெரும்புளுகோ இது. நிற்க,

மூன்று கோடி ஆண்டுகளுக்கு மேலாகவே வாழ்ந்திருந்த மிக்க கிழவியாகிய தாடகையைப் பதினாறு வயது வாலிபனாகிய இராமன் கொன்றான். முதலில் கைகளை இராமன் வெட்டினனென்றும், இலக்குவன் அவளுடைய காதுகளையும் மூக்கையும் வெட்டினனென்றும் பின்னர் இராமன் அவளைக்கொன்றன னென்றும் கூறுகின்றனர் வால்மீகி. இவ்விரு வீரரின் வீரந்தான் யாதோ? என்ன விந்தை? மிகவும் பழுத்த கிழவியாகிய தாடகையை இரண்டு வாலிபர் கூடிக் கொல்வது மிகப் பெரிய வீரமன்றோ? அதினும் அவள் பெண்பால். இதனாலேயே பெரும்புலவராகிய கம்பரும் தமது அபிப்பிராயத்தைக் கூனி வாக்காக அயோத்தியா காண்டத்திலே பின் வருமாறு கூறுகின்றார்.

"ஆடவர் நகையுற ஆண்மை மாசுறத் தாடகையெனும் பெயர்த் தையலாள் படக்கோடிய வரிசிலை இராமன்."

இலக்குவனது இழிந்த செயலைக் கம்பர் கூறுகின்றிலர். மேலும் விசுவாமித்திர முனிவன் இராமனை நோக்கிப் பெண்ணாயிற்றென்று பாராதே முன்னர் இந்திரனொரு பெண்ணைக் கொன்றான், திருமால் ஒரு பெண்ணைக் கொன்றார் ஆதலின் நீயும் இவளைக் கொல்" எனக் கூறியதைத் தாடகை தோன்றுவதன் முன் கூறுகிறார். ஆனால் கம்பரோ இச்செய்தியைக் குமாரனாகிய இராமனுக்கும் கிழவியாகிய தாடகைக்கும் நடந்த போர் நடுவில் கூறியதாகக் கூறுகிறார், பெண்ணைக்கொல்ல ஏவும் விசுவாமித்திரன் இழிந்த அறிவுதானென்னே?

விசுவாமித்திரன் வேள்வி தொடங்கியபோது சுபாகு, மாரீசர் பல அரக்கரோடு வந்து தடுத்தனர். தாடகையும் வேள்வியை முனிவர் செய்யும்போது தடுத்துவந்தனளெனத் தெரிகிறது. ஆரியர் மிலேச்சரென்கிறது நிகண்டு. ஆதியில் ஆரியர் குதிரை, கழுதை, நாய் முதலிய மிருகங்களை அடித்துத் தின்று வந்தனர். பின்னர் அவர்கள் தம் தெய்வத்துக்குப் பிரீதி என்று சொல்லி வேள்வி என்ற பெயரை வைத்துக்கொண்டு ஆடுமாடுகளைத் தின்றுவந்தனர். இந்த இராம கதையிலும்கூட தசரதன் செய்த பரிவேள்வியில் பல பசுக்

களையும், குதிரையையும், பாம்பு, ஆமை முதலிய அற்பமான உயிர்ப் பிராணிகளையும் தின்றனரென்றும் சோமாசமாகிய கள்ளைப் பருகினரென்றும் தெளிவாக அறிகின்றோம்.

தமிழ்மக்களோ கொல்லாவிரதமே குவலயமெல்லாம் ஓங்க வேண்டுமென்னும் சீலமிக வுடையோர் தம்முயிர் நீப்பினும் தாம் பிறி தின்னுயிர் நீக்கும் வினைபுரியார். பசுக்கொலை புரிந்து ஆயிரம் வேள்வியைச் செய்தலினும்ஒன்றன் உயிர் செகுத்துண்ணாமை நன்று எனக் கொல்லா நோன்பாற்றுபவர். நன்னயஞ் செய்தலையே தமக்குத் தீமைசெய்தோரை ஒறுக்கும் வழியாகக் கொண்டொழுகுபவர். ஆதலின் இவர்களுக்கு ஆரியர் செய்துவந்த பசுக்கொலை வேள்வி எவ்வாறு உடன்பாடாகும்? தமிழ் மக்கள் ஆரியர் வேள்வி செய்த இடந்தோறும் சென்று தடுத்தனர். கொலை வேள்விகளைத் தடுப்பதில் தம்முயிர்போயினும் பெரிதென மதியாது தமிழ் மக்கள் கொலையைத் தடுத்து வந்தனர். மற்ற வேளைகளில் ஆரியருக்கு அவர்கள் யாதொரு கெடுதியும் புரியார். விசுவாமித்திர முனிவன் செய்த வேள்வியிலும் மாரீசன் சாதாரணக்கிரியைகள் நிகழ்ந்த ஐந்துநாளும் வாராமல் கொலைபுரிந்து அவிசொரியும் ஆறும் நாளே வந்து கொலையைத் தடுக்கின்றான். இதனாலேயே மாரீசன், இராவணன், தாடகை முதலியோரை ஆரியர் கேவலமாகக் கூறிவந்தனர். அதனை வால்மீகியும் எழுதினர். இதனை இராவணனைப்பற்றி வரும்போது விவரமாக ஆராய்வோம்.

தாடகை என்ற பெயருடைய ஒரு உத்தமி தமிழ்நாட்டில் வாழ்ந்துவந்ததாகக் கூறப்படுகின்றனள்; அவ்வம்மை மிகவும் அன்பு பூண்டு கடவுளை வழிபட்டு வந்தனள்' அவ்விடம் இப்போது திருப்பனந்தாள் என்று கூறப்பெறுகிறது. ஒரு நாள் இவ்வம்மை சுவாமிக்குச் சாத்துவதற்காகப் பூமாலையை இரண்டு கைகளிலும் தாங்கிப் போடப்போகும்போது உடை சற்று நெகிழ மானங் காத்தற்காக ஆடையை இரண்டு கைகளினாலேயும் இறுக்கினள்; அப்போது பெருமான் தலைகுனிந்து அம்மையின் கையிலிருந்த மாலை தமது கழுத்தில் விழும்படிச் சாய்ந்தனர் என்றால் இவ்வம்மையின் பெருமை தானென்னே! இத்தாடகைப் பிராட்டியாரையே இழிகுணமுடைய

வாரகக் காட்டினர் வால்மீகி முனிவர். ஆரியர் இழிசெயல்தா னென்னே!

ஒரு சிறுப் பெண்ணைக் கொல்லுமாறு ஏவின ஆரிய முனிவன் விசுவாமித்திரனின் பெருந்தன்மைதா னென்னே! ஆரியர் தாய்க் கொலை சால்புடைத்தென்பர்போலும்? நாய்வாலைக் களவாடித் தின்று உலகமெல்லாம் இகழப்பட்டவனன்றோ இக்கோசிகன்? நிற்க, மகா பலிச் சக்கிரவர்த்தி வரலாற்றை ஆராய்வோம்.

மகாபலிச் சக்கிரவர்த்தி மிகவும் உத்தமன். இந்திரன் முதலிய தேவர்களையெல்லாம் வென்று மூவுலகங்களையும் ஆண்டுவந்தான். யார் யார் எதை எதைக் கேட்டபோதிலும் இல்லையென்று சொல் லாமல் கொடுத்தவரும் சிறந்த அறத்தைப் புரிந்துவந்தான். அவ னுடைய பெருமையால் அழுக்காறுற்ற தேவர்கள் பலியின் தங்கை யைக் கொன்ற பெண் கொலைப் பாவியாகிய இந்திரனோடு திருமாலை யடைந்து பின் வருமாறு கூறினதாக வால்மீகி முனிவர் கூறுகிறார்.

"ஓ திருமாலே! விரோசனனுடைய பிள்ளையான பலிச் சக்கி வர்த்தி ஓர் யாகம் செய்கிறான். அதில் தன்னிடம் வந்து யாசிக்கிற வர்களுக்கெல்லாம் அவரவர்கள் கேட்டதுகேட்டபடி தானங்கொடுக் கிறான். ஆகலின் அவனைக் கொல்ல வேண்டும்" (பாலகாண்டம் இரு பத்தொன்பதாவது சருக்கம்) அவ்வாறே திருமால் வாமனனாகி அவ னிடம் மூன்றடி மண் இரந்து அவனைக் கொல்கின்றனர், இவ்விழி ந்த செயலை உண்மையில் இழிந்ததெனக் கண்ட வால்மீகி முனிவர் "திருமால் மானத்தை விட்டு மூவடி இரந்தனர்" என்கின்றனர். மகா பலி செய்த குற்றமாவது யாசிப்பவர்கள் எதை எதைக்கேட்டாலும் இல்லையென்னாமல் கொடுத்த வள்ளற்றன்மையே. இதற்காக அவன் திருமாலால் கொல்லப்பட்டனனெனில் ஆரியர் தமது தெய்வமாகிய திருமாலிடம் எவ்வளவு பெருந்தன்மையை ஏற்றுகின்றனர் என்பது புலனாகும். அவர்களின் தெய்வத்தைப்பற்றிய அறிவுதானென்னே!

கம்பரோ இம்மகாபலி வரலாற்றை இன்னும் கொஞ்சம் விரிவா கக்கூறுகின்றார். அவர் உண்மையான அன்பனாகிய மகாபலியின் குணத்தைக்கண்டு மிகவும் வியப்புடையவராகி இவ்விடத்து மிகவும் பாராட்டத் தகுந்த பாடல்களைப் பாடி யிருக்கிறார். பின் வருவது

சப்பர் வரலாறு. திருமால் வாமனனாகி மகாபலியிடம் அடைந்த போது அவனுடைய குருவாகிய சுக்கிராச்சாரியார் "இவன் வஞ்சத் திருமால். ஆதலின் மூன்றடி மண் தந்து ஏமாறாதே. உன் உயிர் போய்விடும்" என்று தடுத்தனர். அதனைக்கேட்டு மகாபலி,

"வெள்ளியை யாதல் விளம்பினை மேலோர்
வள்ளியாராக வழங்குவ தல்லால்
எள்ளுவ வென்சில இன்னுயி ரேனும்
கொள்ளுதல் தீது கொடுப்பது நன்றால்

மாய்ந்தவர் மாய்ந்தவ ரல்லர்கண் மாயா
தேந்திய கைகொடி ரந்தவ ரெந்தாய்
வீய்ந்தவ ரென்பவர் வீய்ந்தவ ரேனும்
ஈய்ந்தவ ரல்ல திருந்தவர் யாரே

எடுத்தொரு வருக்கொரு வரீவதனின் முன்னே
தடுப்பது நினக்கி தழகோ தகவில் வெள்ளி
கொடுப்பது விலக்குகொடி யோயுனது சுற்றம்
உடுப்பதுவு முண்பதுவு மின்றி விடுகின்றாய்"

எனக் கூறிச் சினந்து மூவடிமண் தருகின்றான். வஞ்சகத் தன்மையரான திருமால் அவ்வுத்த மோத்தமனைக் கொன்றார். இவர் முன் சுக்கிரனுடைய தாயையும் கொன்று பெண்பழி பூண்டார். பெண்கொலை புரிந்தொழுகும் பொறாமையான இந்திரனுக்காகப் பெண் கொலை புரிந்தொழுகும் வஞ்சகரான திருமால் மகாபலியைக் கொன்றது வியப்பாகாது. என்னே ஆரியர் தம் தெய்வங்களுக் கேற்றும் இழிகுணம்! பொறாமை, கொலை, வஞ்சகம் இவைகளை அவர்கள் தீக்குணமென உணர்ந்திலர்போலும். நிற்க இனி மேற்செல்லுதும்.

மிதிலையை நோக்கிச் சென்ற கோசிக முனிவனும் அரச குமாரரும் சோணாநதிக்கரையை யடைந்தனர். இராமன் அந்த தேசம் யாருடையதெனக் கேட்டனன். முனிவன் கூறுவன். "நான்முகன் மகன் குசன் வைதர்பி என்ற தனது மனைவியிடம் குசாம்பன், குசநாபன், ஆதூர்த்தரஜஸ், வசு, என்னும் நான்கு பிள்ளைகளைப் பெற்றான். இவர்களில் வசு என்பவனுடையது இத்தேசம். வசுவின் அண்ணனாகிய குசநாபன் நூறு பெண்மணிகளைப் பெற்

ருன்' போழகு பெற்ற அப்பெண்களை ஓர்நாள் வாயுபகவான்கண்டு மோகித்து நீங்கள் என்னைக் கலியாணம் செய்து கொள்ளுங்கள். நீங்கள் மானிடரை விரும்பாது என்னை விரும்பினால் உங்களுக்கு யௌவனமும் ஆயுளும் நீடித்து நிற்கும் என்றனன்.

அப்பெண்கள் அச்சொல்லைக் கேட்டு சிரித்து 'நீர் தேவரிற் சிறந்தவர். நீர் என் எங்களை அவமானப் படுத்துகிறீர், உம்மை அதிகாரத்திலிருந்து நீக்குவிக்க யாங்கள் வல்லவர்கள், ஆனால் எங்களுடைய தவத்தைக்காக்க விரும்பி உம்மை அவ்வாறு செய்யாதிருக்கின்றோம். புத்தி கெட்டவரே! எங்கள் தகப்பனார் உமக்கு மிருத்யு வாகவேண்டும். சத்தி வாதியாயுள்ள அவரை அவமதியாதேயும். எங்கள் தந்தை எங்களை யாருக்குக் கொடுக்கிறாரோ அவரே எங்கள் கணவராவார்' என்று கூறினர்.

அதுகேட்ட வாயுபகவான் கோபங்கொண்டு அவர்கள் உடலெங்கும் புகுந்து முறித்து முடமாக்கி விட்டான். கண்ணுங் கண்ணீருமாக வந்த அப்பெண்களிடத்தில் நடந்ததை உணர்ந்த குசநாபன் அயோக்கியத் தனமாக நடந்த காற்றவராயனின் செயலால் சினமடையாது .'பெண்களே! உங்கள் பொறுமையைப் பாராட்டுகின்றேன், எல்லோரும் பெருந்தன்மையாக நடந்து எனது குலத்தைப் பெருமைப்படுத்தினீர்கள், எனப் பொறுமையோடு புகன்றான். சோமதை என்ற கந்தருவப்பெண் சூலிமுனியையடைந்து தன்னைக் கலந்து ஓர் பிள்ளையைத் தனக்குத் தாவேண்டப் பிறந்த பிரமதத்தன் என்பவனை அந்த நூறு பெண்களும் மணந்தனர். அவன் அவர்களைத் தொட்டவுடன் அவர்கள் முடம் நீங்கிற்று. இத்திருமணத்தின் பின் குசநாபருக்குக் காதி என்ற மகன் பிறந்தனன். அந்தக் காதியின் மக்களே நானும் கௌசிகி என்ற பெண்ணும். கௌசிகி நதியாயினள். அக்கௌசிகிக் கரையிலேயே நான்வாழ்வேன். இந்த யாகம் செய்யவே சித்தாச்சிரமம் வந்தேன்' என்று கூறினன், விடியற்காலமான போது முனிவன் இராமா! எழுந்திரு விடியற் காலமாய்விட்டது' என்று எழுப்பினன். யாவரும் வழி நடந்து நண்பகலில் கங்கைக் கரையை யடைந்தனர்.

மேலே கண்ட வரலாற்றில் வாயுபகவான் செய்த அக்கிரமத்தைப் பாருங்கள். இவனை ஒரு தேவனென்று எவ்வாறு கூறுவது?

யாதொரு பாவமுமறியாத கன்னிகைகளைக் கற்பழிக்கத் துணிந்து முயல்கின்றனன். அப்பெண்கள் உத்தமிகளாதலால் அவனுடைய கூடா ஒழுக்கத்திற்கு இசைந்திலர். அதற்காக அவன் அவர்களுடைய உடலிற்புகுந்து ஊனமுண்டாக்கின னென்றால் அவ்வாயுபகவானின் அற்ப குணமும் மிகவும் கேவலமான ஒழுக்கமும் இருந்தவாறென்னே! இத்தகைய இழிகுணர்களையே ஆரியர்கள் தங்கள் தெய்வங்களாகக் கொண்டுளர். திருமால் பெண் கொலை துணிந்து புரிகின்றனன். திருமகளைப் பகல் வேளையிலே புணர்கின்றனன். புணர்ச்சி வேளையில் யாராவது வந்தால் இலச்சையின்றி விலகுதலுமில்லாமற் பேசுகின்றனன். ஒருவன் மாள அவனுடலிற் புகுந்து அவன் மனைவியைக்கூடிக் கூடாவொழுக்கம் புரிகின்றனன். அவள் உண்மை தெரிந்து தீயிற் குதித்தால் அச்சாம்பலிற் கிடந்து அறிவிலார்போற் புரண்டு புலம்புகின்றனன், இந்திரனும் பெண் கொலை புரிய அஞ்சு கின்றிலன். அவனுடைய கூடாவொழுக்கமும் கொலைத் தொழிலும் பின்னர் வருமிடங்களில் விளங்கும். வாயுதேவனும் கூடா வொழுக்கத்தில் முயன்று தோற்றுத் தீத்தொழில் புரிகின்றனன். என்னே இவ்வாரியர் தம் தெய்வங்களின் வெறுக்கத்தகுந்த செயல்கள்.

இவ்வரலாற்றைக் கம்பர் இவ்விடத்திற் கூறுகின்றிலர். முனிவன் வேள்விசெய்யத் தொடங்கு முன்னரே கூறுகின்றார், அங்கும் மெல்ல வால்மீகி பாலகாண்டத்தில் 32, 33, 34ஆம் சருக்கங்களில் 75 சுலோகங்களில் விவரமாகக் கூறிய வரலாற்றை வேள்விப் படலத்தில் ஒரு பகுதியாகிய பத்துப் பாடல்களில் அவர் சுருக்கமாகக் கூறுகிறார். அதிலும் வாயுசெய்த கூடா வொழுக்க வரலாற்றை முப்பத்திரண்டு முப்பத்து மூன்றாவது சருக்கங்களிலே 52 சுலோகங்களில் விவரமாக வால்மீகி கூறுகின்றார் அதனைக் கம்பர் நான்கு பாடல்களிற் சுருக்கிக் கூறுகின்றார். தமிழ் மகனாதலின் இவ்வெறுக்கத் தகுந்த வரலாற்றை அவர் சுருங்க உரைத்தனர் போலும் ஆனால் அவர் இவ்வரலாற்றைக் கூறவேண்டிய இடத்தை விடுத்து வேறோரிடத்திற் கூறினர்.

நூறு பெண்கள் ஒருவனை மணந்தனரெனத் தெரிய வருவதால் ஒருவன் பன்மா மணஞ்செய்வது ஆரியர் வழக்குப்போலும்.

பாரதத்தில் திரௌபதை, தருமர் முதலிய ஐவரை மணந்தனளெனத் தெரியவருவதால் ஆரியப் பெண்ணொருத்தி பல ஆடவரை மணந்து வந்த வழக்கமும் புலனாகிறது. இதனால் ஒருவன் பல பெண்களையும் ஒருத்தி பல ஆடவரையும் மணத்தல் ஆரியர் வழக்கமென்பது அங்கையின் நெல்லிக்கனிபோல் விளங்குகிறது.

கோசிகமுனிவன் விடிந்தவுடன்இராமனையும் அவன் தம்பியையும் தட்டி எழுப்புகிறான் இதுபோலவே அவன் எழுப்பும்வரை அப்பிள்ளைகள் தூங்கிய செய்தி முன்னோரிடத்திலும் கேட்கப்பெறறது. இதனால் அப்பிள்ளைகள் அரச குமாரரானதால் அதிகாலையில் எழுந்திருக்கும் வழக்கத்தைக் கொண்டில்லாதவராய்ப் பிறர் எழுப்ப விட்டே எழுந்திருக்கும் வழக்கமுடையவர்போலும். மேலும் காடு மேடுகளில் அலைந்த அலுப்பும் அவர்களைப் பற்றியிருக்குமல்லவா? நிற்க கங்கைக் கரையை யடைந்தபின் நிகழ்ந்த நிகழ்ச்சியை இனிக் காண்போம்.

---

## ஆறும் அத்தியாயம்.

---

விசுவாமித்திரன் இராமனை நோக்கி கங்கையின் வரலாற்றைச் சொல்லத் தொடங்கினான். "இமயமலை அரசனுக்கு கங்கையென்றும் உமையென்றும் இரண்டு பெண்கள் பிறந்தனர். ஒரு நாள் தேவர்கள் வந்து மலையரசனிடம் உம்முடைய மூத்தபெண் கங்கை மூவுலகங்களிலும் ஓடும் ஆறாக வேண்டுமென்று வேண்ட அவனும் இசைந்தான். தேவர்கள்பின் கங்கை விண் சென்று ஆகாய கங்கையெனப் பெயர் பெற்றது. சிவபெருமான் உமையைக் கலியாணம் செய்துகொண்டு அவளோடு சம்போகிக்கத் தொடங்கினார். அவ்வாறு அவர் நூறு தேவ ஆண்டு சம்போகித்தும் அவருக்கு அந்தப் பார்வதியினிடத்தில் பிள்ளையுண்டாகவில்லை. பிறகு பிரம்மா முதலான தேவர்கள் இந்தப் பார்வதியினிடத்தில் ஒரு பிள்ளை பிறந்தால் அந்தப் பிள்ளையை எவன் பொறுப்பான் என்று பயந்தவர்களாய் சிவபெருமானைக் கும்பிட்டு "தேவாதி தேவா! உமது வீரியத்தாலுண்டாகும் பிள்ளையை உலகங்கள் தாங்கமாட்டா. ஆகையால் இதைவிட்டு நீர் உமது மனைவியோடும் தவம் செய்யவேண்டும். மூவு

லகங்கட்கும் நன்மையுண்டாகவேண்டி நீர் உமது வீரியத்தை உமது ஒளிபொருந்திய உடம்பிலேயே தரிக்கவேண்டும்" என்று பிரார்த்தித்தனர். அதற்கு சிவபெருமான் "அவ்வாறு ஆகட்டும்; இப்போது வெளியான வீரியத்தை எவன் தரிப்பான்?" என்று கேட்டனர். அவர்கள் பூமி தரிப்பாள் என்று கூற அவர் பூமியில் விட்டனர். அந்த வீரியத்தால் மலைகளும் காடுகளுமாகிய பூமியெல்லாம் நிரம்பிவிட்டது. அதைக் கண்ட தேவர்கள் அக்கினி பகவானைப் பார்த்து "நீர் வாயு பகவானோடு கூடி சிவபெருமானுடைய வலிய வீரியத்தினுட் புகுதல்வேண்டும்" என்று சொல்லினர். அந்த வீரியமானது அக்கினியினால் வியாபிக்கப்பட்டு வெள்ளி மலையாகவும் நாணற்காடாகவும் ஆயிற்று. அந்த நாணற்காட்டிற்றான் அக்கினி தேவனுக்கும் கார்த்திகைப் பெண்களுக்கும் மகனாய் ஆறுமுகக் கடவுள் தோன்றினர். பின்பு பார்வதி தேவி தேவர்களைப் பார்த்து "பிள்ளையுண்டாகக் கோரி நான் செய்துகொண்டிருந்த சம்போகத்திற்கு நீங்கள் இடையூறு செய்ததனால் உங்கள் மனைவியரிடம் நீங்கள் பிள்ளையைப் பெறமாட்டீர்கள்" என்று வெஞ்சொல்லுரைத்து பூமியைப் பார்த்து "புத்தி கெட்ட பூமியே! எனக்குப் பிள்ளையுண்டாவதைக் கோராததனாலும் கோபத்தை விளைத்தனாலும் நீ அநேக ரூபமுடையவளும் பலர்க்கு மனைவியுமாயிருக்க பிள்ளையுண்டாவதனால் வரும் மகிழ்ச்சியையும் நீ அடையாதிருக்க" என்று சபித்துவிட்டாள். வானவர் வேந்தாகிய சிவபெருமானானவர் அவ்வாறு பார்வதியினிடத்து சாபம் பெற்று வெட்கங்கொண்டு நிற்கும் தேவர்களைப் பார்த்து கவலைப்பட்டு வருணன் பாதுகாக்கும் மேற்றிசையை அடைந்து தமது மனைவியோடு இமயமலையின் வடபாகத்தில் தவம் செய்துகொண்டிருந்தார். இனி கங்கையின் வரலாற்றைக் கேள்" என்று கூறி பின்னரும் கோசிக முனிவர் இராமனை நோக்கிக் கூறுவாராயினர். (இதுவரை கதை வால்மீகி பாலகாண்டம் முப்பத்தாறும் சருக்கம்.)

இராமா! சிவபெருமான் இவ்வாறு தவஞ் செய்துகொண்டிருக்கையில் வானவர் தமக்கொரு படைமன்னருண்டாகக் கருதினர். அக்கினி இந்திரனோடும் தேவரோடும் கூடி நான்முகனை யடைந்து நமது படைமன்னர் உமாதேவியோடு கூடித் தவஞ் செய்வதால்

வேறு படைமன்னரைப்பெறத் தந்திரம் சொல்லும் என்றனர். நான் முகன் "உங்களுக்கு உங்கள் மனைவியரிடம் பிள்ளையுண்டாகாதென உமை சொன்னசொல் வீணாகாது. இதுஉண்மை. ஐயமில்லை. அக்கினி பகவான் படைமன்னரை இக்கங்கையினிடம் உண்டுபண்ணுவான். கங்கையும் பிள்ளையுண்டாக உடன்படுவாள். அது பார்வதிக்கும் சம் மதமாயிருக்கும்" என்றனன். தேவர்களனைவரும் கைலாச மலையை யடைந்து அக்கினி பகவானைப் பார்த்து "சுவாமி! முன்னே நீர் தரித்துக்கொண்டிருக்கும் சிவபிரானது வீரியத்தை கங்கையினிடத் தில் விடவேண்டும்" என்று தூண்டினர். அதுகேட்ட அக்கினியும் கங்கையினிடம் வந்து "கங்காதேவி! சிவபெருமானது இவ்வீரியத் தை வாங்கிக்கொண்டு நீ கர்ப்பந் தரிக்கவேண்டும்" என்றனன். கங்கை பெண்ணுருத் தாங்கினாள். அக்கினி பகவானும் தமது எல்லா சரீரத்தினின்றும் சிவபெருமானது வீரியத்தை அவளிடத்தில் நிரம் பப் பொழிந்தான். கங்கை அத்தீயினால் வெதுப்பப்பெற்று மனதில் மிக வருத்தம் கொண்டு தீயைப் பார்த்து "நீர் மேலும் போலும் விடும் இச் சிவ வீரியத்தை நான் தரிக்க வல்லவளல்லேன்" எனலும் தீ "அப்படியாயின் இக்கருவை இமயமலையின் இச்சிறிய குன்றில் விடு" என்றனன். உடனே கங்கை அந்தக் கருவை வெள்ளத்தி னின்று எடுத்து வெளியில் விட்டுவிட்டாள். அந்த வீரியத்திலிருந்து பொன் வெள்ளி முதலிய லோகங்களெல்லாம் உண்டாயின. கங்கை யின் கருப்பத்திலிருந்து சுப்பிரமணிய சாமி உண்டாகவே வானவர் கார்த்திகைப் பெண்களை நோக்கி அப்பிள்ளையை வளர்க்கச் சொல்லி னர். அப்பெண்கள் நழுவிய கர்ப்பத்திலுண்டாய் விளங்கும் அக் குழந்தையைக் குளிப்பாட்டினர்கள். நழுவிய கர்ப்பத்திலுண்டான தால் ஸ்கந்தா என்றும் கார்த்திகைப் பெண்களால் வளர்க்கப்பெற் றதால் கார்த்திகேயர் என்றும் தேவர்கள் அப்பிள்ளையை அழைத்தார் கள். அப்பெண்கள் அறுவரின் முலைப்பாலையும் அப்பிள்ளை ஆறுமுக முடையவராய்க் குடித்தார். பிறகு வானவர் அப்பிள்ளையைத் தமக் குச் சேனைத் தலைவராய்க் கொண்டனர். பின்னரும் விசுவாமித்திர முனிவர் அக்கங்கையின் வரலாற்றைக் கூறத் தொடங்கினர். (இது வரை கூறியது முப்பத்தேழாவது சருக்கம்.)

மேலே கண்ட வரலாற்றை ஆராய்வோம், இவ்வரலாறு கேட்

பதற்கு மிகவும் வெறுப்பைத் தருவதாக உள்ளது. தேவர்களுக் கெல்லாம் தலைவராகிய சிவபெருமான் உமையோடு நூறு ஆண்டுகள் புணர்ந்தும் இந்திரியம் வெளிப்படவில்லையென்றும் அப்புணர்ச்சி யூடே பிரமன் முதலிய தேவர்கள் அவர்களைக் கண்டு புணர்ச்சியி லிருந்து நீங்க வேண்டினரெனவும் அவ்வேண்டுகோளுக்குச் சிவ பெருமான் இசைந்தனரெனவும் ஆனால் பார்வதி மட்டும் சினங் கொண்டு தேவர்களைச் சபித்ததோடு நில்லாமல் ஒருபாவமுமறியாத பூமியையும் சபித்தனளெனவும் கதை வருகிறது. இது வியப்பாகவே யிருக்கிறது. இந்நூல் வைணவநூலாதலின் சைவத்துக்கு இழுக்குக் கூற இவ்வாலாற்றைக் கூறியிருக்கவேண்டும். இல்லையாயின் ஆரி யர் கொள்கைகளே இவ்வாறு ஆபாசமாக இருந்திருக்க வேண்டும். இதனை முன்னரே கண்டோம். இவ்வித ஆபாசமான வாலாறுகளை எழுதுவதற்கு அவர்கள்மனம் துணிந்துள்ளதாதலின் இதனால் அவர் களுடைய இழிந்த ஒழுக்கம் புலனாகிறது.

மேலும் நூறுண்டு புணர்ந்தும் சிவபெருமானுக்கு வெளிப் படாத வீரியம் தேவர்கள் வந்து தடுத்ததும் வெளிப்பட்டதாகவும் அதை அவர் விண்ணவர் கூறியபடி பூமியில் விட்டதாகவும் பின்பு அதில் அக்கினிதேவனும் வாயுதேவனும் கூடி உட்புகுந்து தமது உட லில் ஆக்கிக்கொண்டனரென்றும் தெரிகிறது. இதுவும் வியப்பாகவே யிருக்கிறது. தீயும் காற்றும் கூடி யாது செய்தனர் என்பது தெரிய வில்லை. வீரியத்துட்புகுதலாவதென்ன? ஒருவேளை அதை அவர்கள் உண்டு தம்முடலில் சேர்த்துக்கொண்டனர்போலும்!

தீக்கடவுள் நாணற்காட்டில் கார்த்திகைப் பெண்கள் அறுவ ரோடும் கூடி ஆறுமுகக் கடவுளைப் பெற்றான் என்று 36-ம் சருக்க மும், அவன் கங்கையோடு கூடி தான் வைத்திருந்த சிவபெருமா னுடைய வீரியத்தை அவளிடம் பெய்து அறுமுகனைப் பெற்றான் என 37-ம் சருக்கமும் கூறுகின்றன. இவை ஒன்றுக்கொன்று மாறு பட்ட செய்திகளே. 37-ம் சருக்கம் கார்த்திகைப் பெண்கள் முரு கனை வளர்த்தனரென்று கூறுகிறது. மேலும் சிவபிரானுடைய வீரி யத்தை தீக்கடவுளும் காற்றவாயனும் கூடி உண்டிருக்க தீக்கடவுள் அவ்வீரியத்தை வெளிவிட்ட செய்திமட்டும் கேட்கப்படுகிறது. வாயு கொண்ட வீரியம் என்னவாயிற்றோ தெரியவில்லை. அதைப்பற்றிய

பின் வரலாறு ஒன்றும் நூலில் இல்லை. இன்னும் கங்கை கொண்ட கரு நழுவி விழுந்துவிட்டதாகவும் அதிலிருந்துதான் முருகன் தோன்றினனென்றும் கதை போகிறது. இவைகளையெல்லாம் சிந்தித்துப் பார்த்தால் வேடிக்கையாகவேயிருக்கிறது. இந்த வரலாற்றின் ஆபாசத்தை உணர்ந்த பண்டித நடேச சாஸ்திரியார் தமது மொழி பெயர்ப்பில் இதனை மொழிபெயர்க்காது விட்டுவிட்டு விருப்பமுடையோர் மூலத்தில்பார்த்து தெரிந்துகொள்ளட்டும் என்று எழுதுகிறார். இது முன்னுக்குபின் முரணான வரலாருக இருக்கிறது. மற்றும் வேண்டுமென்றே குறும்புக்காகஎழுதியதுபோலவும் தோன்றுகிறது. முருகன் வரலாற்றைக் கூறுவதான கந்த புராணம் இதுபற்றி யாது கூறுகிறதெனப் பார்ப்போம்.

சிவபெருமான் மலைமகளை மணந்தபின் யோகு செய்திருந்தார். அப்போது சூரனுதியோரால் துன்புறுத்தப்பெற்றவானவர் அவரையடைந்து தமது பகை வெல்ல ஓர் திருமகனைத் தரவேண்டுமென்று வேண்டிக்கொள்ள அவர் ஆறுமுகங்களோடும் விளங்கினர். ஒவ்வொரு முகத்திலிருந்து ஒவ்வொரு பொறியாக ஆறு தீப்பொறிகள் தோன்றின. அவருடைய ஆணைப்படி அக்கினி தேவனும் வாயுவும் அவைகளைச் சுமந்து கங்கையில் விட்டனர். கங்கை சரவணப் பொய்கையில் அவைகளைச் சேர்க்க அவை ஆறும் ஆறு முகங்களோடும் கூடிய ஒரு பிள்ளையாக ஆயின. அப்பிள்ளையைக் கார்த்திகைப்பெண்கள் அறுவரும் வளர்த்தனர். இதுவே அவ்வரலாறு. இதில் வால்மீகி முனிவர் வரலாற்றைப்போல ஆபாசமான செய்தியொன்றும் காணப்படவில்லை. இவ்வரலாற்றையே வால்மீகி மாற்றி ஆபாசமாகக் காட்டியிருக்கிறார்.

மேலும் வால்மீகி முப்பத்தேழாம் சருக்கத்திலே அக்கினி தேவனும் ஏனைய தேவரும் பிரமனிடம் சென்று வேண்டவும் அவன் அக்கினி தேவன் அந்நிய மாதாகிய கங்கையோடு கூடி ஓர் பிள்ளையைத்தருவான் என்று கூறியதாகவும் அதுகேட்ட தேவர்கள் கயிலாய மலையை அடைந்து அக்கினியைவேண்ட அவன் கங்கையையடைந்து தன்னோடு சேரவேண்டியதாகவும் அவளும் இசைந்து பெண்ணுருவோடு வந்ததாகவும் எழுதுகிறார். இது முன்னுக்குப் பின் மாருக இருக்கிறது. தன்முன் நிற்கும் அக்கினியை விட்டுவிட்டு

தேவர்களிடம் தீ பிள்ளையைப் பெறுவான் என்று நான்முகன்கூறிய தையும் தங்கள்முன் நின்ற தீயை விட்டுவிட்டு தேவர்கள் கயிலாய மடைந்து அங்கு அக்கினியை வேண்டியதாகவும் கூறும் கதை அறி வுடையரால் ஒப்புக்கொள்ளும் தன்மையதா? இதை அறிஞரே தீர்மானித்தல் வேண்டும். இக்கதையைப் பார்த்தால் ஒன்று, அக் கினியும் நான்முகனை அடைந்தான் என்ற வாக்கியம் பொய்யாக வேண்டும்; அல்லது நான்முகனை அடைந்த அக்கினி வேறு, கயிலா யத்திலிருந்த அக்கினி வேறாக இருத்தல் வேண்டும். இதனால் ஆரி யர் தம் தெய்வத்தைப்பற்றிக் கூறும் வரலாறுகளெல்லாம் அறிவு டைய மக்களால் அருவருத்துத் தள்ளத்தக்கனவாகவே இருக்கின றன. இவ்வாறு அருவருப்புகளைத்தரும் வரலாறுகளையெல்லாம்உண் மைத் தமிழ் மகனும் கம்பர் விட்டுவிட்டு முருகப்பிரான் பிறப்பைப் பற்றி ஒரே பாடல் கூறுகிறார்.

அது வருமாறு:—

“ஆயதிவ்விட மவ்விடம் அவிர்மதி யணிந்த
தூயவன் றனக்கரிவையிற் றோன்றிய தொல்லே
வாயுவும் புனற்கங்கையும் பொறுக்கலா வலத்த
சேய்வளர்ந்தருள் சரவண மென்பதும் தெரித்தான்”

(இதன் பொருள்) “மதியணிந்த பரிசுத்தமானவனாகிய சிவ பெருமானுக்குபார்வதியிடம் தோன்றியவரும், வாயுவாலும் கங்கை யாலும் பொறுக்க முடியாத பலத்தைபுடையவருமாகிய முருகக்கட வுள் வளர்ந்தருள்சரவணம் அவ்விடம் என்பதையும்கூறினான்” என் பது இதனால் இவர் அக்கினியைப் பற்றிய பேச்சே கூறாதவராவர். மேலும் வாயு தூக்கிவந்துபோட அதனைகங்கை சுமக்கமாட்டாதவ ளானாள் என்பதாகிய கந்தபுராணவரலாற்றையேஇவர்ஒப்புக்கொண் டவராவர். தீக்கடவுள் கங்கையைக்கூடிய ஆபாச வரலாறுகளையெல் லாம் கம்பர் மறைத்துவிட்டனர். இதுபோலவே அசுவமேத ஆபா சங்களையெல்லாம் கூறாது மறைத்துவிட்டமை முன்னரே தெளிவா கப்பார்த்தோம். கங்கை வரலாறு கூறவந்தவால்மீகி கங்கையில் ஆறு முகக்கடவுள் தோன்றினர் என்று கூறவந்தவர் இவ்வெறுப்பைத்த ரும் வரலாற்றைக் கூறினர். இனிமேற் செல்லுதும் ஆறுமுகக் கட வுள் தோற்ற வரலாற்றைக் கங்கைக் கரையிற் கூறியதாக வால்மீகி

கூறுகிறார். கம்பரோ சோனே நதிக்கரையிலுள்ள சோலையில் வைத்துக் கூறியதாகக் கூறுகிறார்.

விசுவாமித்திரன் பின்னரும் சொல்லத் தொடங்கினான்.

"அயோத்தியில் அரசாண்ட சகர மன்னனுக்கு கேசினி வயிற்றில் அசமஞ்சன் என்றொருபிள்ளை பிறந்தான். சுமதி ஒரு கருப்பிண்டத்தைப்பெற அது வெடித்து அதிலிருந்து அறுபதினாயிரம் கருக்கள் வெளியாயின. அந்தக் கருக்கள் நெய்க்குடங்களில் இட்டுவளர்க்கப்பெற்றன. வெகுகாலஞ் சென்றபின் அந்தக் கருக்கள் அறுபதினாயிரம் குழந்தைகளாயின. அசமஞ்சனுக்கு அஞ்சுமான் என்று ஒரு மகன் பிறந்தான். அசமஞ்சன் தீயவனானதால் ஊரிலிருந்து துரத்தப்பட்டான். ஓர்கால் சகரன் அசுவமேதயாகஞ் செய்யத் தொடங்கினான். யாகக்குதிரையைக் கெட்ட எண்ணங்கொண்டவனாகிய இந்திரன் ஓர்நாள் இராக்கத உருவங்கொண்டு ஒருவருக்குந் தெரியாமல் திருடிக்கொண்டு போய்விட்டான். அதைத் தேடத் தொடங்கிய அறுபதினாயிரவரும் கண்டவர்களையெல்லாம்திருடரென நினைத்து அடித்துத் தொந்தரவு செய்தார்கள்: அது கண்டு தேவர்களும் அசுரர்களும் மிகவும் பயம் கொண்டு நான்முகனைப் பார்த்து பூமிமுழுவதும்சகர புத்திரரால் பிளக்கப்படுகிறது. யாவரும் துன்புறுகின்றனர், என்றனர். நான்முகன் 'அஞ்சாதீர்! அவர்கள் கபில முனியால் சாம்பராக்கப்படுவர்'என்றனுப்பினன்.அறுபதினாயிரவரும் பூமியைத்தோண்டிக் கீழ்பூமிக்குப்போய் அங்கே கபிலமுனிவாருகே குதிரையைக்கண்டு அவரைத்துன்புறுத்த அவரதுசினத்தீயால் சகரர்கள்சாம்பலாயினர்.அதனையறிந்த அஞ்சுமான் கபிலரைவணங்கி குதிரையைக்கொண்டுவரவும் யாகம் நிறைவேறிற்று. தனது பிள்ளைகளிறந்தவருத்தத்தால்வாடிஅவர்களைஉய்விக்கும்வழியைத்தேடி சகரன் முப்பதினாயிரம் ஆண்டுகள் ஆண்டபின் இறந்தான்.கருடனால் தனது சிறியதந்தையரை உய்விக்க வழி கங்கையைக் கொண்டுவருவதே என அறிந்த அஞ்சுமான் சிலகாலம் அரசாண்டு தமது மகன் திலீபனுக்குப் பட்டங்கட்டி முப்பத்திராயிரமாண்டு தவம்புரிந்தும் கங்கையைக்கொணாமலே இறந்தான் திலீபன் முப்பதினாயிரமாண்டுகள் ஆண்டான். அவனாலும் கங்கையைக் கொண்டுவர முடியவில்லை. அவன் மகன் பகீரதன் பட்டத்துக்கு வந்தான். அவன் நான்முகனை

நோக்கி ஆயிரம் ஆண்டுகள் தவம்புரிந்தான். நான்முகன் பகீரதன் முன்தோன்றி 'இதோ கங்கை உன் எண்ணப்படி நடக்கக் காத்துக் கொண்டிருக்கிறாள். கங்கையைத் தரிப்பதற்குச் சிவபிரான் ஒருவரே வல்லவர். ஆதலின் அதுபற்றி அவரைக்கேட்டுக்கொள்' என்று கூறி கங்கையையும் பகீரதன் விருப்பப்படி நடக்கச் சொல்லிவிட்டு மறைந்தான். உடனே பகீரதன் சிவபிரானைநோக்கி ஓராண்டு தவம் புரிந்தான், அவரும் மகிழ்ந்து தோன்றி யருளினர். கங்கை சிவபிரானது சடையில் மறைந்தனள். பின் பகீரதன் வேண்டுதலால் ஒரு சிறிது விடப்பட்ட கங்கை எழு நதிகளானாள். அவைகளில் மூன்று கிழக்கு முகமாகவும், மூன்று மேற்கு முகமாகவும் ஓடின எழாவதாகிய கங்கை பகீரதன் பின் சென்று சகரபுத்திரர் அறுபதினாயிரவரையும் நற்கதிக்கேற்றினள்.'' இவ்வாறு கோசிகன் கூறக்கேட்டு மகிழ்ந்து இராமனும் இலக்குவனும் தூங்கினர். விடிந்தவுடன் அவர்கள் கங்கையைக் கடந்து வடகரை யடைந்து விசாலையென்ற நகரைக் கண்டனர்.

மேலேகண்ட வரலாற்றை ஆராயுமிடத்து சுமதி என்ற பெண் வயிற்றிலிருந்து வெடித்த அறுபதினாயிரம் கருக்களும் நெய்க்குடத்தில் போடப்பெற்று வளர்க்கப்பெற அவை அறுபதினாயிரம் குழந்தைகளாயின என்ற வரலாறு மிகவும் வியப்பாகவும் இயற்கைக்கு மாறாகவும் இருக்கிறது. அறிஞர் மேலே காட்டப்பெற்ற விந்தையைச் சிந்திப்பாராக. அறிஞராகிய கம்பரோ இவ்வியற்கைக்கு மாறான வரலாற்றைக்குறிக்காது அறுபதினாயிரம் குழந்தைகள் பிறந்னர் என்று மட்டும் குறித்தனர். இக்கதையில் இந்திரன் இவ்வாறு சகரன்மீது பொறாமை கொண்டு அதன் பயனாக மிக்க இழிந்த செயலாகிய திருட்டினை வேற்றுருக்கொண்டு செய்வானானால் அவனுடைய குடிகளான தேவர்கள் எவ்வளவு கள்ளத்தனமுடையவர்களாக இருக்கவேண்டும்? இவர்களை ஒறுக்காது தெய்வம் அருளிற்றென்றால் அத்தெய்வத்தின் பெருமையை என்னென்பது? பஞ்சமா பாதகங்களில் ஒன்றாகிய கொலையை இந்திரன் செய்ததை முன்னர் கண்டோம், இப்போது மற்றொன்றாகிய களவு செய்ததைப் பார்த்தோம். இனி இவன் என்னென்ன செய்கிறானோ மேலே காண்போம். இந்திரன் செய்த இக்களவு அறுபதினாயிரம் பேர்களின் அழிவில்

முடிகிறது. அறுபதினுயிரவரும் கண்டகண்ட பேர்களையெல்லாம் துன்புறுத்தினர். அதுகண்டு களவில் கைதேர்ந்த தேவர்களும் இந்திரனும் அஞ்சி நான்முகனையடைந்து காக்க வேண்டுகின்றனர். இத் தேவர்களின் வீரந்தானென்னே? இத் தீயோர்களுக்கு நான்முகன் தேர்தல் கூறுகின்ருனும்! இதனுல் இந்த நான்முகனைப்பற்றித்தான் யாது கூறுவது?

வால்மீகி முனிவர் சகரன் முப்பதினுயிரம் ஆண்டுகள் ஆண்டானென்றும் அஞ்சுமான் சிலகாலமாண்டு பின் முப்பத்திராயிரமாண்டு தவம் புரிந்தானென்றும் திலீபன் முப்பதினுயிரம் ஆண்டுகள் ஆண்டனனென்றும் கூறுகின்றனர். இவை நம்பமுடியாதவைகளா யுள. யோகிகளா யிருப்போர் யோகமகிமையால் நெடுங்காலம் வாழலாம். போகிகளாகிய இம்மன்னர் இவ்வளவு காலம் எவ்வாறு வாழ்ந்தனரோ? இவ்வாறு இவர்கள் நெடுங்காலம் ஆண்ட வரலாற்றைக் கம்பர் கூருது அஞ்சுமானுக்குப்பின் அவன் வழியில் பகீரதன் தோன்றினன் என்கின்றனர்.

பகீரதனைப் பற்றி கம்பர் கூறும் வரலாறு வால்மீகியோடு மாறுபடுகிறது. பகீரதன் ஆயிரமாண்டுகள் நான்முகனைக் குறித்துத் தவம் செய்தான். நான்முகன் கங்கைக்கு உத்திரவு தந்தபின் பகீரதன் ஓராண்டு சிவபெருமானை நோக்கி தவம் புரிந்தனன் என்ருர் வால்மீகி. கம்பரோ அவன் நான்முகனை நோக்கிப் பதினுயிரம் ஆண்டுகளும், சிவபெருமானை நோக்கிப் பதினுயிரம் ஆண்டுகளும், கங்கையை நோக்கி ஐயாயிரம் ஆண்டுகளும் திரும்பவும் சிவபெருமானை நோக்கி இரண்டாயிர மாண்டுகளும், மறுபடியும் கங்கையை நோக்கி இரண்டாயிர மாண்டுகளும் ஆக முப்பதினுயிரம் ஆண்டுகள் தவம் புரிந்தானென்கிருர். வால்மீகி ஆயிரத்தொரு ஆண்டுகளென்றதை இவர் முப்பதினுயிரமாகப் பெருக்கினுர். ஒன்றை ஆயிரம் பதினுயிரமாகப் பெருக்கிக் கூறுவது கம்பர் போன்ற கவிகளின் திறமை போலும்! நான்முகனை நோக்கி ஆயிரமாண்டு தவம் செய்தானென்று வால்மீகி கூறியதைப் பதினுயிர மாண்டென்றும் சிவபெருமானை நோக்கி ஓராண்டு தவம்செய்தானென்பதை இரண்டு தடவையாகப் பனிரண்டாயிரமாண்டென்றும் கம்பர்கூறுகிருர்.

மேலும் கங்கையை நோக்கித் தவம் செய்ததாகவே வால்மீகி

கூறவில்லை. அப்படியிருக்க கம்பர் அவனை நோக்கி முதன் முறை ஐயாயிரமாண்டுகளும் பின் இரண்டாயிரமாண்டுகளும் தவம் செய்தான் பகிரதனெனக் கூறுகிறார். மேலும் கங்கையிலேயே சகாபுத்திருக்கு உய்வென கருடன் அஞ்சுமானிடம்கூற அவன் அறிந்தனனென வால்மீகி கூறுகிறார். இதற்கு மாறாக கம்பர் அஞ்சுமானுடைய பேரனாகிய பகிரதன் தனது குருவாகிய வசிட்டனுடைய சொல்லின்படி நான்முகனை நோக்கி தவம் செய்ய நான்முகன் தோன்றி அவனிடம் கங்கையாலேயே சகாபுத்திரர் உய்யவேண்டுமெனக் கூறினனெனப் புதுக்கதை கட்டினார். கங்கை பாதாளஞ் சென்று அறுபதினாயிரம்பேர் நற்கதியடையச் செய்தவுடன் நான்முகன் தோன்றி பகிரதனைப் பாராட்டி அவனூருக்குப் போகும்படி கூறுகிறான் என்று வால்மீகி முனிவர் கூறுகிறகதையைக் கம்பர் கூறவில்லை. சிவபெருமான் கங்கையில் ஒரு பகுதியைச் சடையிலிருந்து கீழே விட்டவுடனே அது ஏழு நதிகளாக ஆயிற்று. அவைகளில் ஒன்றே கங்கை என்று வால்மீகி கூறுகிறார். கம்பரோ கங்கை ஒன்றே சடையிலிருந்து வந்ததென்றார். இனி மேற்சொல்லுவோம். இதுவரை கூறிய சகரவரலாறும் வால்மீகி முனிவருடைய பாலகாண்டம் 38, 39, 40, 41, 42, 43, 44 ஆகிய ஏழு சருக்கங்களில் கூறப்பெறுவது. இனி 45, 46, 47-ம் சருக்கங்களின் கதையைக் கவனிப்போம். அது வருமாறு;—

விசாலை நகரத்தை விசுவாமித்திர முனிவன் அரசகுமாருடனடைந்ததும் இராமன் அவ்வூரின் வரலாற்றைக்கூற வேண்டினன் உடனே முனிவன் அவ்வரலாற்றைக் கூறினன்.

"இந்திரன் சம்பந்தமாக நடந்த கதையைச் சொல்லுகிறேன் கேள். இராம! முன்பு கிருத யுகத்தில் திதி என்பவளுக்கு அசுரர்களும், அதிதி என்பவளுக்கு தேவர்களும் பிறந்தார்கள். தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் என்ன செய்தால் சாவில்லாமலும் கிழத்தனமில்லாமலுமிருக்கலாமென்ற எண்ணமுண்டாயிற்று. அவர்கள் ஒன்றுகூடி அவ்வாறு எண்ணி பாற்கடலைக் கடைந்து அதிலிருந்து வரும் அமுதத்தை உண்டால் அவ்வெண்ணம் முற்றுப்பெறுமெனத் தீர்மானித்து கடையத் தொடங்கினர். கடலிலிருந்து முதலில் தன்வந்திரியும் பின் அறுபதுகோடி அப்சரப்பெண்களும் தோன்றினர்.

அவர்களை ஒருவரும் கைப்பற்றவில்லை. பின் வாருணி என்ற பெண் என்னை யாராவது கைப்பற்றுங்கள் என்று கூவித் தோன்றினாள். அவளை தேவர்கள் கைப்பற்றினர். அவளைக்கைப்பற்றினதால் அவர்கள் மயிர்க்கூச்சடைந்து மிக மகிழ்ச்சியுடையவர்களாயினர்.

பிறகு ஒரு குதிரையும் கௌத்துபம் என்னும் மணியும் தோன்றியபின் அமுதமும் தோன்றிற்று. அவ்வமுதத்தை எடுத்துக்கொள்வதைப்பற்றி தேவர்களும் அசுரர்களும் சண்டை தொடங்கினர். அசுரர்கள்பலர் கொல்லப்பட்டனர். திருமால் மோகினி உருவெடுத்து அமுதத்தைக் கொண்டுபோய்விட்டார். இந்திரன் அவரைப்பணிந்து அமுதத்தைவாங்கிக்கொண்டு அசுரர்களையும்கொன்று அரசுசெலுத்தினான். பிள்ளைகளையிழந்த திதி வருந்தி தனது கணவனாகிய காசியபனையடைந்து தன் வருத்தங்களைக்கூறி இந்திரனைக் கொல்ல ஓர் மகனைத் தரவேண்டினள். அம்முனி அவளைத்தொட்டுதேறுதல்கூறி "நீ ஆயிரமாண்டு நல்லொழுக்கத்தோடு தவம்செய்தால் இவ்வேண்டுதல் நிறைவேறும்' என்றலும் அவள் மகிழ்ந்து தவம் செய்தாள். அவள் தவம் செய்கையில் இந்திரன் அவளுக்குத் தக்க பணிவிடை செய்தான்.

அவன் அவளுக்கு வேண்டிய தீ, பழம், தருப்பை முதலியவைகளைத் தந்தான். அவன் அவளுக்குச் சிரமத்தைப் போக்கும்படியான உடம்பு பிடித்தல் முதலிய பணிவிடையாவும் எக்காலத்திலும் செய்துகொண்டிருந்தான் அவள் தவம் முடிய பத்து ஆண்டுகளிருக்கும்போது 'உனக்குத் தம்பியுண்டாகப் பத்து ஆண்டுகளே உள. அவன் உன்னை வெல்வதிலேயே எண்ண முள்ளவனாயினும் உன்னோடு ஒற்றுமையாயிருக்கும்படி சொல்வேன். அவனோடு நீ நீடுவாழ்க' என்றனள். ஓர்நாள் அவள் நடுப்பகலில் தலைமாட்டில் காலை வைத்துத் தூங்கினாள். அவள் தலைமாட்டில் காலும் கால்மாட்டில் தலையுமாகப் படுத்துத் தூங்கினதால் ஒழுக்கந் தவறியவளாயினாள். அதுகண்டு இந்திரன் அவளுடைய கருவை அழிக்க நல்ல தருணமாயிற்றென மகிழ்ந்தான். அவன் அவளுடைய பெண்குறி வழியாக உள்ளேபுகுந்து கருப்பத்திலிருந்த குழந்தையை ஏழுதுண்டுகளாக அறுக்கத் தொடங்கினான். அக்குழந்தை அழத் தொடங்கிற்று. அதனால் திதி விழித்துக்கொண்டாள். இந்திரன் அழ வேண்டாம் அழவேண்டாம் என்றுசொல்லி கொஞ்சமும் மனமிரங்

காமல் மிகக்களிப்போடும் அதைத் துண்டித்து விட்டான். பின் இந்திரன் பெண்குறி வழியாக வெளியே வந்துவிட்டான். அந்த எழு துண்டுகளும் எழு மருத்துக்களாயின. இதுதான் திதியின் கருவை இந்திரன் அழித்த இடம். வெகு காலத்தின்பின் விசாலன் என்ற ஓர் அரசன் இவ்விடத்தில் விசாலை என்று ஒரு நகரை உண்டாக்கினன். அந்நகரே இது. இதில் அம்மன்னவனின் வழியில் வந்த சுமதி என்ற மன்னன் அரசாள்கிறான்'' இவ்விதமாகக் கோசிகமுனிவன் கூறினன். இவர்கள் வந்திருப்பதைக் கேள்வியுற்று சுமதி எதிர்கொண்டு உபசரித்தான். அவ்விசாலா நகரத்தில் அன்றிரவைக் கழித்துவிட்டு மறுநாள் விசுவாமித்திர முனிவனும் அரச குமாரர்களும் மிதிலை நகருக்கருகே உள்ள ஓர் பூஞ்சோலையை யடைந்தார்கள். மேலேகண்ட வரலாற்றை பின்னர் ஆராய்வோம்.

கடலைக் கடைவதற்குக் காரணம் தேவர்களும் அசுரர்களும் ஒன்றுகூடி தாம் சாவாமலிருக்கும் பொருட்டு அமுதம் பெற எண்ணிய எண்ணமேயாம். இவ்வால்மீகி கூற்றுக்கு மாருகக் கம்பர் புதியதோர் கதை கட்டினர். அதாவது ஓர் வித்தியாதரப் பெண் வைகுந்தமடைந்து திருமகளைப்புகழ, அவள் மகிழ்ந்து கொடுத்த மாலையை வாங்கிவந்து துர்வாச முனியிடம் கொடுக்க, அம்முனி உவந்து இந்திரனிடம் கொடுக்க, அவன் யானைத் தலையில் வைக்க, அது கையாலெடுத்து காலால் நசுக்க, அதைக்கண்ட முனி சினந்து 'உனது செல்வமெல்லாம் கடலில்விழ நீ துயருறுக' எனச் சபிக்க, அவ்வாறே இந்திரன் வளங்குன்றி வருந்தக்கண்ட தேவர்களும்,சிவபெருமானும், நான்முகனும் திருமாலையடைந்து வேண்ட, அவருத்தரவுப்படி இழந்த செல்வங்களையடைய கடலைக் கடைந்தனர் என்பதுமாம். இப்புனை கதைக்கு ஆதாரம் வால்மீகி ராமாயணத்தில் ஓரிடத்திலும் கிடையாது. இதனல் கம்பர் கூறுவனவெல்லாம் ஒரு சிலவே வால்மீகி போக்குடன் ஒத்திருப்பதும் மிகப் பல மாறுபட்டிருப்பதும் புலனுகும். இதனல் கம்பர் தமது மனம்போனவெல்லாம் கதையைக் கொண்டுபோகிருரே ஒழிய வால்மீகியைப் பின்பற்றுகின்றிலர். இப்புனை கதையைப் படிப்பதால் தமக்குப் பிள்ளைப் பேறு முதலியன கிடைக்குமென மயங்கிப் படிப்போரது அறிவுதானென்னே! கம்பருடைய கவிகளும் மிகவும் அருமையானவைகளா

யிருந்தாலும் அவை முழுவதும் பொய்புனை கதைகளாகவே உள. ஆதலின் அவை முழுவதும் பயனில் சொற்களே ஆகும். அதனால் இராமாயணத்தைப் படித்துப் பாராட்டுவதெல்லாம் பயனில் சொற் பாராட்டுதலேயாம் என்று துணிக.

கடலைக் கடைந்ததற்குக் காரணம் அதனுள்ளே புகுந்திருந்த இந்திரனுடைய செல்வங்களைத்திரும்பவும் அடைவதே என்றால் அசுரரும் ஓர்புறம் கடைந்தனரென்றல் அறிவிலாரும் அறிந்த கூற்றாகும். ஏனெனில் அசுரர் தேவர்களுக்குப் பிறவிப் பகைவர். ஆதலின் வால்மீகி முனிவர் கூறும் காரணமே அறிவுடையார் ஒப்புமாறுளது. தேவாசுரர்கள் கடலைக் கடைந்தபோது அவர்களுக்குச் சிவபெருமானாவது திருமாலாவது நான்முகனாவது உடனிருந்து உதவியவரல்லர்.

வால்மீகியார் கதைப்படி முதலில் ஓராயிரமாண்டுகள்கடைந்தும் ஒன்றும் எழவில்லை. அப்போது பாம்பு வாசுகி நஞ்சைக் கக்கிற்று. அந்த ஆலகாலமென்ற நஞ்சால் யாவரும் வருந்தி அலறிச் சிவபெருமானிடம் அடைந்தனர். அப்போது திருமாலும் அங்கே வந்து சிவபெருமானை நோக்கி, "சுவாமி! தேவரீர் தேவர்களிலெல்லாம் தலைசிறந்தவர். ஆதலின் முதல் மரியாதை தமக்காம். எனவே தயவு செய்து நஞ்சையுண்டு காத்தருளும்" என்று வேண்டிப்போயினர். சிவனாரும் நஞ்சையுண்டு உலகத்தைக் காத்தார். இவ்வாலாற்றைக் கூறாது நஞ்சும் பிறையும் கடலில் தோன்றின. அவைகளைத்திருமால் மங்கைபங்கனுக்களித்தார். என்று கம்பர் கூறுகிறார். இவை உண்மையை மறைக்கும் தன்மைகளாம். இவர் வைணவ ஆரியரிடம் தயவு பெற வேண்டினமையின் இவ்வாறு மறைத்தனர் போலும் இவரைப் போலவே வால்மீகி மொழிபெயர்ப்பாளராகிய வைணவ பண்டித அநந்தாச்சாரியர் இவ்வரலாற்றை மூலத்தைமட்டும் பதித்து மொழி பெயர்க்காது விட்டிருக்கிறார். இதுவே கம்பர் போக்குக்கும் ஓர் தகுந்த எடுத்துக்காட்டாம். ஆனால் பண்டித நடேச சாஸ்திரியாரும் மன்மதநாததத்தரும் தங்கள் மொழிபெயர்ப்பில் நன்றாக இவ்வரலாற்றை மொழிபெயர்த்துளர்.

கடலிலிருந்தெழுந்த பெண்களில் வாருணி என்பவளைத் தேவர்கள் கைப்பற்றி மயிர்க்கூச்சடைந்து தழுவினர் என்றும் அசுரர் அப்பெண்ணை ஏறெடுத்தும் பார்த்திலர் என்றும் வரலாறு கூறுவ

தால் தேவர்கள் காமிகளென்பது புலனுகிறது. அசுரர் காமத்தில் ஈடுபடாதவர்போலும்! சுராபானம் செய்பவர் அதாவது கள்ளைக் (சுரா—கள்) குடிப்பவர்கள் சுரரென்றும் சுராபானம் செய்யாதவர் கள் அசுரரென்றும் பெயர் பெற்றதற்கொப்ப இங்கே சுரர்காமிகளா யிருந்ததையும் காண்கின்றோம்.

அமுதமெழுந்தபோது சுராசுரர் அதுபற்றிப் போரிட்டனர். அதுதான் நல்ல சமயமென்று திருமால் மோகினி உருவெடுத்து அதைத் தூக்கிச் சென்றனர். இந்திரன் அசுரரையெல்லாம் கொன்று திருமாலைப் பணிந்து அமுதம் பெற்று வாழ்வடைந்தான். இதனுல் திருமால் செய்த வஞ்சகம் புலனுகிறது. முன்னரும் திருமால் இந் திரனுக்காகச் செய்த தீச்செயல்களைக் கண்டோம் இவ்வாறு வஞ் சகச் செயலைத் திருமாவின்மேல் ஆரியர் ஏற்றினர்.

தனது மக்களாகிய அசுரர் மடிந்தமை கண்டு வருந்தி இந்திர னைக் கொல்லத் தகுந்த பிள்ளையை அடையத் திதி தவம் புரிகின்ற னள். அதைத் தெரிந்த இந்திரன் அவளையடைந்து அவளுக்குப் பணிவிடை செய்து அவளை ஏமாற்றி அவளோடு உடன்வாழ்கின்ற னன். தவம் செய்பவளாகிய திதிக்கு உடம்பு பிடித்தல் முதலிய பணிவிடைகளையும் அவன் செய்தனனும். திதியும் அதற்கு இணங்கி யிருந்தனளாம். அவள் செய்த தவத்தின் மேன்மைதானென்னே? முழுமகனும் இந்திரனைத் தன் உடம்பு பிடித்தல் முதலிய பணிவிடை செய்யத் திதி இடங்கொடுத்தனளே. இவளுடைய பெண் தன்மை தானென்னே? இவள் தன் சக்களத்தி மகன் என்பதுபற்றிப் போலும் இத்தகாத செயல்களுக்கு அவள் இடங்கொடுத்தனள். காமியும் வஞ்சகனுமாகிய இந்திரன் கருப்பமுற்றிருக்கும் தனது பெரிய தாயாகிய திதியின் உடல்பிடித்தல் முதலிய பணிவிடை செய் திருக்கும்போது ஒருநாள் அவள் தலைமாடு கால்மாடு, கால்மாடு தலை மாடாக மாறி படுத்தனளாம். அதனுல் அவள் தன் ஒழுக்கம் கெட் டதாம். என்னே இவ்வாரியர்தம் ஒழுக்கத்தைப்பற்றிய கோட் பாடு? இதனை ஒரு பெரிய ஒழுக்கக் கேடாகக் கொள்கின்றனரே!

உடனே இந்திரன் தனது பெரிய தாயாராகிய திதியின் பெண் குறிக்குள்ளே நுழைகிறுன். என்னே இப்பாதகனின் இழிசெயல்? தன் பெரிய தாயாரின் குறிக்குள்ளே நுழைந்து கருப்பப்பையை

யடைகிறான். அங்கிருந்த சிசுவை இரக்கமில்லாமல் அது அழ அழ ஏழு துண்டுகளாக வெட்டுகிறான். இவ்வாறு சிசுக்கொலை கருவழித்தல் முதலிய மனத்தினாலும் நினைக்க முடியாத பெரும் பாதகங்களை இந்திரன் செய்கின்றான். தலைமாறிப் படுத்ததைப் பெரிய குற்றமாகக்கருதும்ஆரியர் இந்திரனுடைய இவ்விழிசெயல்களைக் குற்றமாகக் கருதாது இந்திரனைப் பாராட்டுகின்றனர். இவ்விந்திரனுக்காக நான்முகனும் திருமாலும் பல உதவிகளைச் செய்கின்றனர் என்றும் கதைகளெழுதுகின்றனர். தனது தந்தைக்கு முதல் மனைவியாகிய திதியின் பெண்குறியை அவள் தூங்கும்போது பார்த்து அதன்வழியாகக் கருப்பையில்நுழைய இப்பாவி இந்திரனின் மனம் எவ்வாறு துணிந்ததோ? இவ்வளவு ஆபாசமான கதைகளையெல்லாம் கம்பர் எவ்வாறு தமது பாடலில் எழுதுவார்? அவர் தமிழ் மகனுதலின் இவைகளையெல்லாம் ஒழித்து சுருக்கமாக ஓரேபாடலில் திதி தவம் செய்வதை உணர்ந்த இந்திரன் அவளையடைந்து பணிந்திருந்து அவள் வயிற்றிலிருந்த குழந்தையை ஏழு கூறுகளாக வெட்டினன் என்றுகூறிவிடுகிறார். அப்பாடல் வருமாறு.

"கேட்டவாசவன் அன்னவட் கடிமைபிற் கிடைத்து
வாட்டமாதவத் துணர்ந்தவள் வயிற்றுறு மகவை
வீட்டியே யெழு கூறுசெய்திடுதலும் விம்மி
நாட்டநீர்தா மருத்தெனு நாமமு நவின்றான்."

இப்பாற்கடல் கடைந்ததும், திதி தவம் செய்ததும், இந்திரன் கருவழித்ததுமாகிய வரலாறெல்லாம் கம்பர் கங்கை வரலாறு கூறுமுன் சோனை நதிக்க கரையிலுள்ள ஓர்சோலையில் நடந்ததாகக் கூறுகிறார். இது பெரிய பிழை. முதல் நூலாசிரியராகிய வால்மீகி முனிவரோ இக்கதை விசாலையென்றும் நகரம் உண்டாவதற்குமுன் அங்கிருந்த சோலையில் நடந்ததாகக் கூறுகிறார். இது ஒரு முக்கியமான மாறுபாடே. விசாலா நகரத்திற்கு கங்கையைக் கடந்து கோசிகமுனிவரும்வந்தனர். அவ்வூர்மன்னன்உபசரிக்கஅங்கு அன்று தங்கி மறுநாள் மிதிலை கண்டனர். அம்மூவரும் என்று கம்பர் கூறுகிறார். விசாலையைப்பற்றி விசாரித்ததும் அதன் பழைய வரலாறு கூறியதுமாகிய ஒன்றும் அவர் குறித்திலர், இவ்வாறு கம்பர் வால்மீகி கூறுவதை மாற்றி மாற்றியும், மறைத்து மறைத்தும், புதுவது

புதுவது புனைந்தும் கம்பர் தமது பாடல்களைப் பாடிப் போகின்றனர். இனிமேற் செல்லுதும்.

---

## ஏழாம் அத்தியாயம்.

---

மிதிலா நகரத்தின் பக்கத்திலிருந்த அந்தப் பூங்காவனத்தில் பழக்கமற்றுப் பாழாய்க்கிடந்த ஒரு அழகான ஆச்சிரமத்தைக்கண்டு இராமன் அதன் வரலாற்றை வினவ விசுவாமித்திரன் கூறுவானாயி னன். "இந்த இடம் கௌதம முனிவருடையது; அம்முனிவன் தனது மனைவியாகிய அகலிகையோடு கூடித் தவம் செய்துகொண் டிருந்தனன். ஓர் நாள் இந்திரன் அந்த கௌதமன் இல்லாத தரு ணம் தெரிந்துகொண்டு கௌதம வேடம் பூண்டு அகலிகையிடம் வந்து "மிக்க அழகுடையவளே! உன்னோடு நான் புணர்ச்சி செய் யக் கருத்துக்கொண்டிருக்கிறேன். அதைக் கோரி வருகிறவர்கள் ருது காலத்தை எதிர்பார்க்கமாட்டார்கள்; ஆதலால் இப்போதே புணர்ச்சி செய்யவேண்டும்.'' என மொழிந்தான். அப்பெண் முனி வேடத்தோடு வந்திருப்பவன் இந்திரன் என அறிந்து தனக்கு தேவேந்திரன் கிடைத்தானென்று மிகமகிழ்ந்து அறிவு கெட்டவ ளாகி அவனிடத்தில் விருப்பங்கொண்டாள். புணர்ச்சி முடிந்த வுடன் மிகவும் திருப்தியடைந்தவளாகி அவள் இந்திரனைப் பார்த்து "பிரபு! எனது கருத்துக் கைகூடிவிட்டது. ஒருவருக்குந் தெரியா மல் இவ்விடத்தினின்று சீக்கிரமாய்ப் போய்விடும். எல்லா விதத் தாலும் உம்மையும் காப்பாற்றிக்கொண்டு என்னையும் காப்பாற்றும்'' என்று சொன்னாள். இந்திரன் புன்னகையோடு அகலிகையைப் பார்த்து "கட்டழகியே! நான் உன்னைக் கூடி மிகுந்த களிப்பெய்தி னேன். வந்தபடியே போய்வருகிறேன்" என்றனன். இவ்வாறு இந்திரன் அகலிகையைப் புணர்ந்துவிட்டு கௌதமனிடம் பயந்து பரபரத்து வெளியிற்புறப்பட்டான். அப்போது அம்முனிவன் அவ னைக் கண்டுகொண்டான். இந்திரன் அஞ்சி வாடிய முகமுடையவ னாயினன். உடனே முனிவன் "அறிவு கெட்டவனே! என்னைப் போல உருவந்தரித்துச் செய்யத் தகாத இச்செயலைச் செய்தாய்

ஆதலால் நீ விருஷணமற்றவனாய் விடுக" என்று கடுஞ்சொல்லுரைத்தான். அச்சொல்லை அவன் சொன்னவுடனே இந்திரனுடைய விருஷணங்கள் (பீசங்கள்—விதைகள்) இரண்டும் அப்பொழுதே பூமியில்விழுந்துவிட்டன. பின் அம்முனிவன் அகலிகையைப்பார்த்து "நீ நெடுங்காலம் உணவில்லாமல் காற்றைமட்டும் குடித்து சாம்பலில் விழுந்து தவித்து ஒருவர் கண்ணுக்கும் புலப்படாமல் இங்கே இருப்பாய். இராமன் இவ்வனத்திற்கு வரும்போது இச்சாபம் நீங்கும். அப்போது என்னோடு சேர்ந்து களிப்பாய்" என்று சபித்தான். பின் அம்முனி இமயமலையின் சிகரத்தில் தவம் செய்து கொண்டிருந்தான். இந்திரன் விதைகளற்றவனானவுடனேமிகவருந்தி தேவர்களைப்பார்த்து "உங்களெல்லாரையும் அதிகாரத்தினின்று தள்ளுவதற்காக மகாத்மாவாகிய கௌதமமுனிவன் செய்த தவத்திற்கு நான் இடையூறு செய்து கோபத்தை யுண்டாக்கி உங்களுக்கு நன்மையைச் செய்தேன். அம்முனிவன் கோபங்கொண்டதினால் நான் விருஷணமற்றவனாய்விட்டேன். அவ்வகலிகையும் சாபம் பெற்றவளாய்விட்டாள். எங்களிருவருக்கும் அம்முனியைப் பெரிய சாபங் கொடுக்கும்படி நான் செய்து அம்முனியின் தவத்தை அழித்தேன். ஆதலால் நீங்கள் என்னை விருஷணமுடையவனாகச் செய்யுங்களென்றான். அதுகேட்ட தேவர்கள் பிதிரு தேவதைகளிடம் வந்து "இப்போது உங்களுக்கு யாகத்தில் கொடுக்கப்படுகிற ஆட்டுக்கடா விருஷணத்தோடு (விதைகளோடு) கூடியிருக்கிறது. இந்திரனோ விருஷணமில்லாதவனாகஇருக்கிறான். ஆதலால் ஆட்டுக்கடாக்களின் விதைகளைச் சீக்கிரமாகக் கொண்டுவந்து இந்திரனுக்குக் கொடுங்கள். விதையடிக்கப்பெற்ற ஆட்டின் மாமிசம் மிக்க களிப்பையுண்டாக்கும். இனிமேல் மனிதரும் காயடித்த ஆட்டின் மாமிசத்தையே உங்களுக்குக் கொடுப்பார்கள்" என்று வேண்டினர். உடனே பிதிரு தேவதைகள் ஒன்று கூடி கடாவின் விருஷணங்களை எடுத்து இந்திரனுக்கு உபயோகப்படுத்தினார்கள். அதுமுதல் பிதிரு தேவதைகள் விருஷணமற்ற ஆட்டுக்கடாக்களைப் புசிக்கிறார்கள். இந்திரனும் ஆட்டின் விருஷணத்தையுடையவனாய்விட்டான் இராமா! நீ இந்த ஆச்சிரமத்துள்ளே போய் அகலிகையைப் பழையபடி எல்லோருடைய கண்ணுக்கும் புலப்படுபவளாக்கவேண்டும்" என்று விசுவாமித்திர முனிவன் கூறினன்.

இராமனைக் கண்டதும் முனிவன் சொல்லின்படி அகலிகை எல்லோருடைய கண்ணுக்கும் புலனாயினாள். உடனே இராமலக்குவர் அவளுடைய பாதங்களைப் பிடித்துக்கொண்டார்கள். அவளும் இவர்களை வணங்கினாள். பின் அவள் கௌதம முனிவனை அடைந்தாள். அம்முனிவனால் உபசரிக்கப்பெற்ற விசுவாமித்திர முனிவன் அப்பிள்ளைகளை அழைத்துக்கொண்டு மிதிலையையடைந்து அங்குள்ள சனக மன்னவனுடைய வேள்விச் சாலையை அணுகினான். இவ்வாலாற்றை ஆராய்வோம். மேலே கண்ட வாலாறு வால்மீகி பால காண்டம் 49, 50-ம் சருக்கங்கள்,

இவ்வாலாறு மிகவும் வெறுக்கத் தகுந்ததாக உள்ளது. இது பெண் கொலைப்பாதகனும் திருடனும் வஞ்சகனுமாகிய இந்திரன்—வீட்டுக்கு விலக்கமாக இருந்த, ஒரு பெண்ணைப் புணர்ந்ததையே மேலே குறித்தது. தீண்டத்தகாத ஒரு பெண்ணை அவள் கணவனில்லாத சமயம் பார்த்து அவள் கணவனைப்போல மாறுவேடம் பூண்டு இந்திரன் அகலிகையை யடைந்து தன்னைச் சேர வேண்டுகின்றனன். அவள் விலக்கமாக இருந்ததைக் கூற "அது பாவாயில்லை; அவசரத்திற்குக் குற்றமில்லை; சும்மா கூடலாம்" என்கிறான் இந்திரன். இவ்விழிமகனுடைய இழிந்த அறிவுதானென்னே? அவளோ தேவேந்திரனோடு தனக்குப் புணர்ச்சி கிடைத்ததே என மிக மகிழ்ந்து தன்னைக் கூடுமாறு அவனை வேண்டுகிறாள். உடனே இருவரும் கூடுகின்றனர். இந்த வாலாற்றை கம்பர் சற்று மாற்றிக் கூறுகிறார். அதாவது இந்திரன் அகலிகையைக் கூடி இன்புறுகிறான். அப்புணர்ச்சி மத்தியிலேயே அவள் அவனை இன்னானென அறிகிறாள். அறிந்தபின்னும் அச்செய்கை தக்கதன்றென உணராளாய் அவனோடு இன்பம் நுகர்கிறாள் என்று கம்பர்கூறுகிறார். அச்செய்புள் வருமாறு:—

"புக்கவளோடும் காமப் புதுமணமதுவின் றேறல்
ஒக்கவுண்டிருத்தலோடு முணர்ந்தனள் உணர்ந்த பின்னும்
தக்கதென்றென்ன ஓராள் தாழ்ந்தன ளிருப்ப"

அவள் அப்போது விலக்கமாயிருந்த செய்தியைக் கம்பர் மறைத்தார். கௌதம முனிவன் இந்திரனைக் கண்டபோது அவன் ஒரு பூனையைப்போல உருவம் தாங்கிச் சென்றானெனக்கம்பர் ஓர் புதுக்

கதை புனைந்தார். இது வால்மீகி கூறுதது. இந்திரன் முனியுருவுடனி ருக்கும்போதே அம்முனி அவனைக் கண்டதாக வால்மீகி கூறுகிறார்.

அகலிகையைக் கல்லாகப் போகும்படி கௌதமன் சபித்தன னென்றும் அவள் அவனை வேண்ட இராமனுடைய கால் பட்ட வுடன் கல்லுரு நீங்கி முன்னைய பெண்ணுருவருமென அம்முனி சாப விடை தந்தனனென்றும் கம்பர் கூறுகிறார். அதன்படியே இராமனுடைய கால்பட்டவுடன் கருங்கல்லாக இருந்த அகலிகை பெண்ணுருவடைகிறாளென்றும் கம்பர்கூறுகிறார். இவ்வாலாறு வால் மீகிக்கு முற்றிலும் மாறுபட்டது. வால்மீகியோ அகலிகையை ஒரு வர் கண்ணிலும் படாமலிருக்குமாறு முனிவன் சபித்தானென்று கூறுகிறார். இராமன் அந்த ஆசிரமத்துள்ளே போனவுடன் அவ னைக்கண்டபோது அகலிகை பிறர்கண்ணிற்படும் தன்மையளாகிறாள்.

வால்மீகி கூறுகிறபடி இந்திரன் விருஷணமற்றவனாகிறான். இதன் கருத்து என்னவென்றால் ஆண்தன்மை யிழந்தவனாகிறான். அதாவது ஆண்தன்மைக்கு முக்கிய காரணமாகவிருக்கிற விருஷணமற்ற காளை கள்(காயடித்த காளைகள்) எவ்வாறு ஆண்தன்மையற்றுப் போகின் றனவோ; அவ்வாறே ஆண் தன்மையற்றுப் போகிறான். இந்தச் சாபம் மிகவும் கொடுமையானது. அகலிகையென்ற பெண்ணின் சம்மதம் பெற்று அவளும் மிகுந்த விருப்பத்தோடு தழுவக்கூடிய இந்திரனுக்கு நினைக்கவும் கொடுமையான சாபத்தைக் கௌதமன் தந்தானென்றால் அவன் இழிதன்மைதானென்னே! என் வீட்டுப் பசு பொல்லாதது; உன்வீட்டுக் காளையை அடக்கிக்கொள் என்றோர் அறிவீனன் கூறியதுபோலன்றோ உள்ளதிச்செயல். அவன் தன் னுடைய மனைவியைக் கண்டித்திருக்கவேண்டியது அவசியமே. இல்லையாயினும் ஔவையார் உபதேசிக்குமாறு சற்றேனும் ஏறுமா றாக இருப்பாளேயாமாகில் கூறாமற் சந்நியாசங் கொண்டிருக்க வேண்டும். இந்திரனுக்கு இவ்வித கடுமையான சாபம்கொடுத்த கௌதமன் தன்னுடைய மனைவிக்குச் சாதாரணமான சாபமே தரு கிறான் அதாவது அவள் ஒருவர் கண்ணிலும் படாமலிருக்கவேண்டு மென்பது. இதனால் அவன் அவளைச் சிறிது காலம் தள்ளிவைத்திருந் தான்போலக் காணப்படுகிறது. கடைசியாக இந்திரனாற் கற்பழிக் கப்பட்ட அகலிகையைச் சேர்த்துக்கொள்ளவும் செய்கிறான் அம்

முனிவன். இவ்வாரியர்களுடைய கற்பு நிலைதானென்னே? தன்னிடத்தில் பிரியமில்லாமலிக்கிற இம்மங்கையை இவன் ஏன்மணந்தான்? அதனாலன்றோ அவள் இந்திரனை விரும்புகின்றாள். இக்கௌதமன் தன் மனைவியிடத்திலிருந்த அபிமானத்தினாலேதான் அவளுக்குக் குறைந்த சாபத்தைக் கொடுத்து பின் தன்னோடு சேர்த்துக்கொண்டான்போலிருக்கிறது. இவ்வாறுதன் மனைவியிடத்தில் தான் வைத்திருந்த அபிமானத்தால் அவள் விபசாரியானமையை நேரிலே கண்டு அவளைத் திரும்பவும் சேர்த்துக்கொண்ட முனிவன் என்ன தவம் செய்துக்கொண்டிருந்தானோ? இவனும் ஒரு முனிவனும்! இவன் தேவர்களையெல்லாம் அவர்கள் பதவியிலிருந்து விலக்குவதற்காகத் தான் தவம் செய்தானும்! இச்செய்தியை இந்திரன் தேவர்களிடம் கூறிய மொழிகளால் அறிந்துகொள்ளலாம். தேவர்களைப் பாதுகாப்பதற்காகவே இந்திரன் கௌதமன் மனைவியைப்புணர்ந்து அவனுக்குச் சினமூட்டினனும். ஒருவனுக்குச் சினமூட்ட வேண்டுமென்றால் அவன் மனைவியைக் கற்பழிப்பதுதான் அதற்கு வழிபோலும்! என்னே இப்பாதகனுடைய இழிசெயல்! இவனுக்காக நான்முகன் திருமால் முதலிய தேவர்கள் இரங்கி இவனுக்கு வேண்டிய உதவிகளைச் செய்தனரென்றால் அவர்களுடைய தெய்வத் தன்மைதானென்னே! இவ்விவரமெல்லாம் முன்னரே கண்டோம்.

---

## எட்டாம் அத்தியாயம்.

---

விருஷணமற்ற இந்திரனுக்கு பிதிருதேவதைகள் தாங்கள் தின்னும் ஆட்டுக்கடாக்களின் விருஷணங்களை ஒட்ட வைக்கின்றனர். அதுமுதல் அவர்கள் விருஷணமற்றுக் கொழுத்திருக்கும் ஆட்டுக் கடாக்களை உண்பவராயினராம். இவ்வித ஆபாசமான கதையை என்னவென்பது? இவைகளையெல்லாம் எழுத நேர்ந்தது எமது பாவமே எனினும் உண்மை உணராது சாதாரண மக்களெல்லோரும் இவைகளை உத்தமமான கதைகளென நம்பி பயபக்தியோடு படிக்கின்றனரே என்னும் பரிதாபமே இவைகளை விவரமாக எழுதுமாறு எம்மைத் தூண்டிற்று. இவ்வரலாற்றைக் காய்தல் உவத்தல்

இல்லாது சமமான மனநிலையோடு சீர்தூக்கிப் பார்க்கும்படி அறிஞரை வேண்டுகின்றோம்.

இதனைப் படிக்கும் தமிழ் மக்கள் அனைவரும் இவ்வாபாச வரலாறு தம்முடையதன்று என்றும் ஆரிய மக்களுடையதென்றும் எப்போதும் மறவாமல் மனதிற்கொள்ள வேண்டுகின்றோம். மேலே கண்ட வரலாற்றில் பிதிரு தேவதைகளுடைய வரலாறும் வருகிறது. இவ்விழிவான மாமிச உணவினரைப் பிதிருக்கள் என்று ஆரியர் கூறுகின்றனர். இவர்களைத் தமிழர் தம்முடைய பிதிரு தேவதைகளென்று மயங்கி கொள்கின்றனரே! பரிதாபம்!! பரிதாபம்!!! இனியாவது தமிழ் மக்கள் உண்மையுணர்வார்களாக. இத்தேவர்கள் முனிவர்களுடையவாலாறுகளை இராவணேசுவரனைப்பற்றி ஆராயுமிடத்து விவரமாக ஆராய்வோம்.

கௌதம முனிவன் இந்திரனுக்குக் கொடுத்ததாக வால்மீகி கூறும் சாப வரலாறு சான்றோர் செய்யத்தகாததாகவும் மிகவும் கொடுமையாகவும் இருக்கிறது. இவ்வரலாற்றைக் கம்பர் மிகவும் ஆபாசமானதாக ஆக்கினர். இந்திரனை பூனை உருவெடுத்து ஓடினதாகவும் அவனைக்கண்ட கௌதமன் அவனுடைய உடம்பில் ஆயிரம் பெண் குறிகள் உண்டாகவெனச் சபித்தனனென்றும் கம்பர் கூறுகிறார்.

"ஆயிரமாதர்க்குள்ள அறிகுறி நினைக்குண்டா கென்
றேயினன் அவையெல்லாம் வந்தியைந்தன இமைப்பின் முன்னம்"

தசாதன் செய்த அசுவமேத யாகம் போன்ற ஆபாசமான வாலாறுகளையெல்லாம் மறைத்தோ மாற்றியோ எழுதிய கவியாசு கம்பருடைய உயர்ந்த அறிவில் இவ்வாபாசக்கதையையும் பாடவேண்டுமென்னும் தோற்றம் எவ்வாறு எழுந்ததோ? அவர் வாய் எவ்வாறு இவ்விழி வாலாற்றைக் கூறத்துணிந்ததோ? அவர் காந்தான் எவ்வாறு எழுதிற்றோ? என்னென்பது? கம்பர் வால்மீகி வாலாற்றை இவ்விடத்து மாற்றப் புகுந்தது என் செய்வது? ஆயிரம் பெண்குறிகள் ஒருவனுடைய உடலிலே பொருந்துமாறு ஒரு முனிவன் சபித்தானென்று எழுதினரோ கவி வல்லார் கம்பர்! அல்லது கம்பர் எழுதினதாகப் பிறர் இடைச் செருகலாக வந்ததோ இது? என்னென்பது! கம்ப இராமயணத்தில் வந்துள்ளபடி தேவர்கள் நான்முகனை

முன்னிட்டுக்கொண்டு கௌதம முனிவனை யடைந்து வேண்டிக் கொள்ள கௌதமன் அவைகளை ஆயிரம் கண்களாகுமாறு சாப விடை தந்தனனும். உடனே ஆயிரம் யோனிகளும் ஆயிரம் கண்க ளாயினவாம். இரண்டுகண்களோடு இந்திரன் இவ்விதமான கெட்ட நடைகள் புரிவானுயின் ஆயிரம் கண்களோடு என்னென்ன கேடு புரிவானே என்று கௌதமன் ஓர்ந்து பார்த்தானில்லைபோலும்! இதி லிருந்து ஒன்று ஊகிக்கற்பாலது என்னவெனில் தீயொழுக்கமுடைய வனுகிய இந்திரன் தன் நடைக்கேட்டால் உடம்பெல்லாம் வெட்டை என்று சொல்லப்படுகிற கணக்கில்லாத புண் நோயை யடைந்தான் போலும். அதனுல் அவன் உடம்பெல்லாம் கணக்கிறந்த புண்களா யினபோலும். அதனையே கவி இவ்வாறு கூறுவாராயினர் என்பதே ஆவ்வூகம்.

கம்பர் கூறும் இவ்வாலாறு வால்மீகியோடு பொருந்துமாறில்லை. எனெனில் அவர் இவ்வரலாறு கூறும்போது இந்திரனைப்பற்றிக் கூறு மிடங்களில் ஆயிரங் கண்ணன் என்கிறூர். ஆதலின் இவன் அகலிகை யைக் கூடுமுன்னரே இவனுக்கு ஆயிரங் கண்கள் இருந்திருக்க வேண்டுமென்பதாகிறது. எனவே அவ்வாறு ஆயிரங் கண்கள் இந்திரன் பெறுவதற்கு வேறு காரணம் இருந்திருக்க வேண்டும். இவ்விடத்தில் இந்திரனுக்கு வடமொழியில் சகஸ்ர யோனி என ஒரு பெயர் இருப்பது சிந்திக்கற்பாலது. இனி இவ்வெறுக்கத் தகுந்த வாலாற்றை இவ்வளவோடு விடுத்து மேற்செல்லுதும்.

அறிஞர்களாகிய தமிழ் மக்களுக்கோர் வேண்டுகோள், நாம் இதை எச் சமயத்திலேனும் அல்லது எத்தெய்வத்திடத்தேனும் வெறுப்பினுல் எழுதுகின்றனமென நினைத்தல் கூடாது. தமிழ் மக்கள் தமது தெய்வங்களுள் ஒன்ருக எண்ணிவணங்கும் திருமால் வேறு; இவ்வாரியர் தெய்வம் வேறு. தமிழ் மக்கள் வணங்கும் திருமாலைப்பற்றி சமயம் வாய்க்கும்போது விவரமாக எழுதுவோம். இவ் வாராய்ச்சியிலும், இராமாயணத்திலும் வரும் திருமால் நான்மு கன் முதலியோர் ஆரியருடைய தெய்வங்கள். அவ்வாரிய தேவதை களின் தன்மைகளை ஆரியர் கூறுமாறு எடுத்துக்காட்டி அவர்களைத் தம் தெய்வமென வணங்கும் தமிழ் மக்களுக்கு அவற்றின் உண் மையை விளக்கிக்காட்டவே ஈதெழுதுகிறேம்.

விசுவாமித்திர முனிவன் வந்திருப்பதை அறிந்த சனக மன்னன் தனது புரோகிதனுன சதானந்தனை அழைத்துக்கொண்டு எதிர்கொண்டுவந்து இன்சொற்கூறி வரவேற்ருன். சதானந்தன் அகலிகையினுடைய மகன். அவளைக் கௌதமன் ஏற்றுக்கொண்டமை தெரிந்து அவன் மகிழ்ச்சியடைந்தான். விசுவாமித்திரனுடைய வரலாற்றை சதானந்தன் இராமனுக்குக் கூறினுன். அது வருமாறு:-

காதி என்பவனுடைய மகன் விசுவாமித்திரன். அவன் அநேக ஆயிரமாண்டு ஆண்டனன். விசுவாமித்திரன் ஓர் சமயம் தன் சேனைகள் புடைசூழ பலதலங்களையும் பார்த்து வருபவன் வசிட்ட முனிவனுடைய ஆசிரமத்தை அடைந்தான். விசுவாமித்திரனுடைய தகப்பன் காதி. அவன் தந்தை குசநாபன். அவன் தந்தை குசன் அவன் தந்தை நான்முகன். ஆதலின் நான்முகனின் பேரனுக்குப் பேரன் விசுவாமித்திரன். வசிட்டனே நான்முகனுடைய மகன். தனது ஆசிரமத்தையடைந்த விசுவாமித்திரனுக்கு வசிட்டன் தனது பசுவாகிய காமதேனுவின் உதவியால் விருந்து செய்தான். காமதேனு விசுவாமித்திரனுடைய சேனையில் எல்லோருக்கும் அவரவர்கள் விரும்பிய பொருளை எல்லாம் தந்தது. விசுவாமித்திரன் ஆசைகொண்டு அப்பசுவைத்தனக்குக்கொடுத்துவிடும்படிகேட்க வசிட்டன் மறுத்தான். உடனே அரசன் அப்பசுவை இழுத்துக்கொண்டு போனுன். அது வசிட்டனிடம் ஓடிவந்து முறையிட்டது. வசிட்டன் காமதேனுவை நோக்கி "நான் பலமில்லாதவன். அரசனே மிக வலியுடையான். அவனே எனது விருந்தினனுக இருப்பதோடு பூமிக்குச் சொந்தக்காரனுகவு மிருக்கிருன். சேனுபலமும் அவனுக்கிருக்கிறது" என்று கூறினுன். பசுவோ "பிராமணராகிய நீர் க்ஷத்திரியராகிய விசுவாமித்திரரைவிட பலவகையிலும் பலமுடையீர் எனக்கு ஆணை தந்தால் நானே அவனை அழிக்கிறேன்" என்றது. வசிட்டனுணையால் பசு ஒரு முக்கலிட்டது அதிலிருந்து பல வீரர் தோன்றினர். அவர்களையெல்லாம் அரசன் அழித்தான். பின்னும் அது ஒரு முக்கலிட்டது. அதன் மடியிலிருந்து பப்பலவர்களும் காம்போசர்களும் தோன்றினர். அதன் யோனியிலிருந்து யவனர்களும், குதத்திலிருந்து சகர்களும், மயிர்க்கால்களிலிருந்து மிலேச்சர் முதலிய வீரர்களும் உண்டாயினர். அவர்கள் அரசன் சேனையை

அழித்தனர். அதுகண்ட அரசன் மக்கள் நூற்றுவரும் வசிட்ட னேடு எதிர்த்தனர். முனிவன் அவர்களை ஒரு முகூர்த்த காலத்தில் சாம்பலாக்கினன். அதுகண்ட விசுவாமித்திரன் வருந்தி சாகாமல் மீந்த ஒரு மகனை அழைத்து அரசை அவனிடம் ஒப்புவித்து இமய மலையையடைந்து தவம் புரிந்தான். அவனுக்குச் சிவபெருமான் தோன்றி பல அம்புகளையும் அருளினர். அதனல் அகந்தைகொண்ட விசுவாமித்திரன் வசிட்டனேடு கடும்போர் தொடங்கினன்.

அதுகண்ட வசிட்டன் "உனது க்ஷத்திரிய பலமெங்கே, என் னுடைய பிராமணபலமெங்கே" என்று கூறி ஒரு தடியோடு போர் செய்தான். அத்தடியின்முன் அரசன் அம்புகளெல்லாம் நாசமா யின. அதனல் அரசன் தோற்றனன். அத்தோல்வியால் மனம் மிக வருந்தி தனக்கு வசிட்டனேடு ஏற்பட்ட வீணன சண்டையை நினைந்து பெருமூச்சு விட்டு தனது மனைவியை அழைத்துக்கொண்டு "நான் இனி பிராமணத் தன்மையை அடையப் பெருந் தவம் செய் வேன்" என்று கூறித் தென்திசையை அடைந்தான். இவ்வளவில் இவ்வரலாற்றை ஆராய்வோம்.

நான்முகனுடைய மக்களில் ஒருவனுகிய வசிட்டன் பிராமண னுகவும் மற்ருெருவனும் அவன் வழிப்பிள்ளைகளும் அரசனுகிய க்ஷத் திரியாாகவும் இருந்தமை காண்கிருேம். இதனல் ஒருவனுடைய மக் களில்சிலர்பிராமணராகவும்,சிலர்க்ஷத்திரியராகவும், மற்றும்சிலர் மற் றைய குலத்தினராகவும், இருக்கலாமெனத் தெரிகிறது. வசிட்ட னும் அவன் உடன்பிறந்தவனுகிய குசன் வழித் தோன்றலுக்கும் நிகழ்ந்த சண்டையே இது. இதனல் க்ஷத்திரியர் முதலியபல வரு ணத்தாரினும் பிராமணரே வலியுடையவர் என்பதை விளக்குவதற் காக இக்கதை குறிக்கப்பெறுவது என அறியலாம். ஆனல் சாதா ரணமாக இருந்த பிராமணரெல்லாம் இவ்வலியுடையரென இக்கதை விளக்கவில்லை. வசிட்டனைப்போன்ற முனிவரே பிராமணர்; அவர் களே வலியுடையோர் என்பதுதான் இக்கதையால் நிலைநாட்டப் பெறுவது. வசிட்டனே பெண்டாட்டி பிள்ளைகளோடு வாழ்ந்தான். இவனுடைய செயல்களையும் இவன் போன்ற முனிவர்களுடைய செயல்களையும் பிராமணப் பெருமையையும் அடுத்த கட்டுரையில் ஆராய்வோம். பெண்டாட்டி பிள்ளைகளோடு காட்டிலிருந்த வசிட்

டன் ஓர் தடியால் அரசனாகிய விசுவாமித்திரனை வென்றான் என்பது விந்தையாகவே உள்ளது இவன் காமதேனுவினிடம் கூறிய மொழிகளைக் கவனித்தால் மிகவும் பயங்காளி என்பது தெரிகிறது. இவன் விசுவாமித்திரனையும் அவன் சேனைகளையும் வென்றதோடு விஸ்வாமித்திரனது மக்கள் நூற்றுவரையும் எரித்துவிட்டானும்.

---

## ஒன்பதாம் அத்தியாயம்.

---

விசுவாமித்திரன் பலதலங்களையும் சுற்றிவருபவன் வசிட்டமுனிவன் இடத்தையும் அடைந்தானென வால்மீகி கூறுகிறார். கம்பரோ அவன் வேட்டையாடச் சென்றவன் வசிட்ட முனிவனையடைந்தானெனக் கூறுகிறார். வசிட்டன் அயோத்தியையடுத்த வனத்திலேயே இருந்தவனாவன். அது அந்நிய நாட்டுக்காடாதலால் அங்கே வேட்டையைக்குறித்து விசுவாமித்திரன் சென்றானென்பது பொருந்தாததாகும். வால்மீகி கூறும் வரலாறே பொருந்துவதாக உள்ளது.

விசுவாமித்திரன் தனது நூறு பிள்ளைகளும் மாண்டவுடன் மீந்த ஒரு மகனுக்குப் பட்டங்கட்டிச் சிவபெருமானை நோக்கி தவம் செய்து பின் வசிஷ்டனோடு சண்டையிட்டுத் தோற்றான் என்று வால்மீகி கூறுகிறார். கம்பரோ இதற்கு மாறுபடக் கூறுகிறார். விசுவாமித்திரன் தன் மகனொருவனுக்குப் பட்டங்கட்டியதைக் கூற அவர் முற்றும் மறந்துவிட்டனர். மேலும் தனது பிள்ளைகள் நூறு பேரும் இறந்தவுடன் விசுவாமித்திரன் வசிஷ்டனோடு சண்டையிட்டான் என அவர் கூறுகிறார். அச்சண்டை மத்தியில் விசுவாமித்திரன் சிவபெருமானை நோக்கி வணங்கிவழுத்தவே அவர் தோன்றி ஓர் படை தந்ததாகக் கம்பர் கூறுகிறார். வால்மீகி முனிவர் இவ்வாறு கூறாது தன் பிள்ளைகள் இறந்தவுடன் விசுவாமித்திரன் இமயமலையையடைந்து தவம்புரிந்து சிவனருளால் எண்ணிறந்தபடைகள் பெற்றுப் பின்னரே வந்து போர் தொடங்கினானென்பர், தோற்றவுடன் விசுவாமித்திரன் தவம் புரியத் தென் திசையையடைந்தான் என்று வால்மீகி கூறுகிறார். ஆனால் கம்பரோ அவன் கிழக்குத் திசையை அடைந்ததாகக் கூறுகிறார். ஆதலின் கம்பர் முதற்கண்

"தேவபாடையின் இக்கதை செய்தவர்
மூவரானவர் தம்முளு முந்திய
நாவினுருரையின்படி நான் தமிழ்ப்
பாவினு லிதுணர்த்திய பண்பரோ"

எனத்தாம் வால்மீகி கூறுகிறபடி இராம கதையைப் பாடுகிறேன் என உணர்த்தியதற்கு மாருகவே இராமாயணம் பாடுகிருரெனத் தெரியவருகிறது. கம்பருடைய கணக்கற்ற மாற்றங்களை அங்கங்கே குறித்துவிளக்கிவந்திருப்பதை இவ்வாராய்ச்சியுரையைத்தொடர்ந்து படித்துவரும் அன்பர்கள் நன்ருகக் கவனித்திருப்பார்கள். இனி காமதேனுவின் செயல்களை ஆராய்வோம்.

காமதேனு என்ற ஒரு பசு எண்ணிறந்த சேனைகளுக்கு வேண்டிய பொருள்களையெல்லாம் தந்துதவியதென்பது ஆச்சரியமாகவே இருக்கிறது. இப்பசுவை விசுவாமித்திரன் கேட்டபோது வசிஷ்டன் கொடுக்க மறுத்துவிடுகிருன். ஆனல் கம்பரோ இங்கு மாறுபடுகிருர். அவர் கூறுவது:—

"வற்கலையுடையன் யானே வழங்கலென் வருவதாகிற்
கொற்கள் வேலுழவநீயே கொண்டகல்கென்று கூற"

என்பது அதாவது "நான் கொடுப்பதென்ன? அது வருவதானல் நீயே கொண்டுபோ" என்று முனிவன் கூறினன் என்பர்.

காமதேனு அரசனிடமிருந்துதப்பிஓடிவந்து முனிவனையடைந்து வினவ அவன் அஞ்சியவன் போலக் கூறுகிருன். உடனே பசு முனிவனுடைய விடைபெற்றுப்பல வீரரை உண்டாக்கிற்று என்பது வால்மீகி வரலாறு. கம்பரோ முனிவன் ஆணைபெருமலே பசு சண்டை தொடங்கிற்று என்று கூறுகிருர். பசு முக்கிற்று உடனே அதன் மடியிலிருந்து சிலரும், யோனியிலிருந்து சிலரும், குதத்திலிருந்து சிலரும், மயிர்க்கால்களிலிருந்து சிலரும் தோன்றினர் என்று வால்மீகி கூறுகிருர். இது நான்முகன் முகத்திலிருந்து பிராமணரும் நெஞ்சிலிருந்து க்ஷத்திரியரும், இடையிலிருந்து வைசியரும், காலிலிருந்து சூத்திரரும் தோன்றினர் என்று கூறும் வரலாறு போலவே மிகவும் ஆபாசமாக இருக்கிறது. ஆண்மகனுகிய நான்முகன் பிள்ளை பெற்றுன் என்பதே இயல்புக்கு மாறு. அதிலும் முகத்தி

லிருந்து சிலரையும் தோற்றுவித்தானென்பது அறிவுக்கு அடாததா கும். கௌதம முனிவன் சாபத்தால் இந்திரனுக்கு உடலெங்கும் பெண் குறிகள் அமைந்தன என்று கம்பர் கூறுகிறார் எனப் போன கட்டுரையில் ஆராய்ந்தோம். இந்நான்முகனுக்கு யார் சாபத்தால் இவ்வாறு நெற்றியிலும், மார்பிலும், இடுப்பிலும், காலிலும் பெரும் பெண் குறிகள் அமைந்தனவோ தெரியவில்லை. கரு எவ்விடம் தங்கிற்றோ? வெவ்வேறு விதமான அக்கருக்களை உண்டுபண்ணினவர்கள்தான் யாவரோ? இவ்வளவு ஆபாசமான கதையைக் கட்டிவிட்டுளர் ஆரியப் பார்ப்பனர்கள் இச்சாதி வரலாற்றை வேறோர் சமயம் விரிவாக ஆராய்வோம். இவ்விழிந்த வரலாறுபோலவே ஊது இக்காமதேனுவின் மடி,யோனி முதலிய உறுப்புக்களிலிருந்து வெவ்வேறு வகையினர் தோன்றினர் என்பது மடியிலிருந்து சிலரும், யோனியிலிருந்து சிலரும், குதத் (மலவாயில்) திலிருந்து சிலரும் தோன்றினர் என மொழிபெயர்ப்பாளரான அநந்தாச்சாரியாரும் மன்மதநாததத்தரும் தெளிவாக எழுதினும், நடேச சாஸ்திரியார் யோனி,குதம் முதலிய உறுப்புக்களைஆபாசமானவையெனமறைத்து மடியிலிருந்து சிலரும், அதன் உடம்பிலிருந்து சிலரும் தோன்றினரெனப் பொதுப்படக் கூறினர். கம்பரோ உறுப்புக்கள் இன்னின்னவைகளிலிருந்து இன்னின்னார் தோன்றினரென்னாமல் பொதுவாகப் பசுவினிடம் இன்னின்னார் தோன்றினரென்பர். அது வருமாறு:—

> "பப்பாரெவனர் சீனர் சோனகர் முதல்பல்லோர்
> கைப்படை யதனிேனாடும் கபிலை மாட்டுதித்து"

பப்பரர் முதலிய கூட்டத்தினர் கையிலே ஆயுதங்களோடும் தோன்றினரென வால்மீகியார் கூறவில்லை. இனி தவம் செய்யச் சென்ற விசுவாமித்திரர் வரலாற்றை ஆராய்வோம்.

விசுவாமித்திரன் தன்மனைவியையும் அழைத்துக்கொண்டுதென் திசையை யடைந்து பயங்கரமான தவத்தைச் செய்தான். அப்போது அவனுக்கு ஹவிஸ்யந்தர், மதுஷ்யந்தர், திருடநேத்ரர், மகாரதர் என்ற பெயரையுடைய பிள்ளைகள் உண்டானார்கள். இவ்வாறு தவம் செய்வதில் ஆயிரமாண்டுகள் கழிந்தபின் நான்முகன்தோன்றி அவனுக்கு "ராஜரிஷி" என்றபட்டம் தந்தான். அதனால் விசுவாமித்திரன் கோபமடைந்து வெட்கத்தால் தலை குனிந்து மறுபடியும்

தவம் புரிந்துகொண்டிருந்தான்.

அக்காலத்தில் அயோத்தியில் திரிசங்கு என்னும் மன்னன் ஆண்டிருந்தனன். அவன் ஐம்பொறிகளையும் வென்று நல்லவனாக இருந்தான். அவன் உடலோடு சுவர்க்கம் (தேவருலகம்) போக எண்ணினான். அதற்காக அவன் ஒரு யாகம் செய்ய விரும்பி குலகுருவான வசிட்டனை வரவழைத்துச் சொன்னான். வசிட்டன் "அந்தச்சங்கதி முடியா" தென்று கூறிவிட்டான். மன்னன் பின் வசிட்டனுடைய பிள்ளைகளிடம் போனான். வசிட்ட முனிவனுடைய நூறு பிள்ளைகளும் சினமடைந்து "எங்கள் தந்தையாலேயே முடியாத இச்செயலை நாங்கள் எவ்வாறு செய்வோம்" என்றனர். திரிசங்கு அப்படியாயின் என் கருத்து நிறைவேற நான் வேறு யாரிடமேனும் செல்கிறேன் என்றனன். அதைக் கேட்ட அவர்கள் மிகச் சினந்து "நீ சண்டாளனாகப் போக, எனச் சபித்தனர். மன்னன் சண்டாளத் தன்மையை அடைந்து கறுத்துக் கடின உருவமுடையவனாகி தலைமயிர் குறைந்து, கறுத்த உடையையும், சுடுகாட்டு எலும்புமாலையையும், சாம்பலையும் இரும்பு நகையையும் அணிந்தவனாக ஆய்விட்டான். மந்திரி முதலியோர் அவனை விட்டு ஓடிவிட்டார்கள். சண்டாள உருவடைந்த திரிசங்குவை விசுவாமித்திர முனி கண்டான். மனமிரங்கி தேர்தல் கூறி அவ்வாறானமைக்குக் காரணம் வினவினன், மன்னவன் "சுவாமி! ஆணையிட்டுச் சொல்கிறேன். நான் இதுவரை ஒரு பொய்யும் கூறினதில்லை. இனியும் கூறேன். பல யாகங்கள் செய்தேன். அறநெறி தவறாது அரசாள்வதோடு குருவுக்கும் மிகப் பணிவுடன் நடந்துவருகிறேன்" என்று கூறி நடந்த வரலாற்றையும் புகன்றனன், அதுகேட்ட முனிவன் நான் அந்த யாகத்தை முடித்து உன்னை உடலோடு தேவருலகத்துக்கு அனுப்புவேன்" என்று கூறி தனது பிள்ளைகளையழைத்து யாகத்திற்குவேண்டியவைகளைத் தயாரிக்கக் கட்டளையிட்டான்.

பல முனிவர்களும் வந்து கூடினர். வசிட்ட முனிவனுடைய பிள்ளைகளும் மகோதயனென்ற முனிவனும் மட்டும் "சண்டாளனுக்கு க்ஷத்திரியன் செய்துவைக்கும் யாகத்தின் அவிசை எப்படி தேவர்களும் முனிவர்களும் உண்பார்கள்" என்று சொல்லி வாராமலிருந்துவிட்டனர். அதனையறிந்த கோசிகன் "என்னை இகழ்ந்த

அந்த நூறுபேரும் சாம்பலாகிவிடவேண்டும். இப்போதே அவர்கள் எமவாதனை அடைந்து எழு நூறு பிறப்பில் பிணத்தைத் தின்ன வேண்டும். அருளற்று என்றும் நாயிறைச்சியுண்டு இழிகுலத்தோராய் விகாரமான பேச்சும் செய்கையும் உருவும் உடையவர்களாய்த் திரியவேண்டும். மகோதயனென்பவன் என்னை இகழ்ந்ததால்வேடனாகி பலகாலம் நாகத்தில் அழுந்தவேண்டும்'' என்று கடுங்கோபத்தோடும் கூறினன்.

யாகம் வெகுகாலம் நடைபெற்றது. அதன் முடிவில் தேவர்கள் அவிர்ப்பாகத்தை வாங்க வரவில்லை. அதனால் அகப்பையையுயரத் தூக்கிக்கொண்டு கடுஞ்சினத்தோடு விசுவாமித்திரன் தனது தவமகிமையால் சுவர்க்கம் போக மன்னனை ஏவினன். உடனே திரிசங்கு சுவர்க்கத்தை நோக்கிச் சென்றான். அதுகண்ட இந்திரன் முதலிய தேவர்கள் அவனைச் சண்டாளனானதால் கீழே போகும்படி சொன்னார்கள். அதனால் திரிசங்கு கீழே நோக்கித் தலைகீழாக விழுந்தான். அதுகண்ட முனிவன் அவனை உயரவே நிற்கும்படி ஏவி அங்கேயே ஓர் சுவர்க்கத்தை சிருஷ்டித்தான். அதுகண்டு பயந்து தேவர்கள் முனிவனையழைத்து அந்த திரிசங்குசுவர்க்கத்தையும் ஒப்புக்கொண்டார்கள். பின் யாகமும் முடிந்தது. இவ்வாறு தன்னுடைய தவத்திற்கு இடையூறு வந்ததாலே கோசிக முனிவன் அவ்விடத்தைவிட்டு மேற்குத் திசையையடைந்தான். இவ்வரலாறு 57, 58, 59, 60-ம் சருக்கங்கள். இதனை ஆராய்வோம்.

---

## பத்தாம் அத்தியாயம்.

---

விசுவாமித்திரன் தென்திசையில் தன் மனைவியோடு போய் தவமியற்றினன். அவனுக்கு நான்கு பிள்ளைகள் பிறந்தனர். அதனோடு ராஜரிஷி பட்டமும் கிடைத்தது. ஒருவன் மனைவியோடு காட்டில் தனியே இருந்து பிள்ளைக் குட்டிகளைப் பெற்றுக்கொண்டு செய்யும் தவம்தானென்னே! அதைக்கண்டு வியந்து நான்முகன் தோன்றிப்பட்டம் கொடுத்ததும் மிக அழகிதே. இவ்வாறு வசிட்ட

முனிவனும் தன் மனைவியோடு கூடித் தவம் செய்பவன் நூறு பிள்ளைகளைப் பெற்றிருக்கிறானென்றறிகின்றோம். கோதம முனிவனும் அகலிகையிடம் சதானந்தனைப் பெற்றான். அவனே இவ்வாலாற்றை இராமனிடம் கூறுகிறான். கிழ்த்திசையையே விசுவாமித்திரன் முதன் முதல் அடைந்தானென்றும் அங்கே திலோத்தமையை இந்திரன் ஏவ அவள் மையலில் முனிவன் அகப்பட்டானென்றும் அதனால் அவன் தவம் குலைந்ததென்றும் கம்பர் கூறுகிறார். திலோத்தமை என்ற தாசிப் பெண்ணைக்கூடுவதால் கெட்ட தவம் தன் மனைவியைக்கூடி பல பிள்ளைகளைப் பெறுவதால் கெடாதுபோலும் தவத்தைப்பற்றிய இவர்கள் அறிவு மிக நன்றே! கோசிகனுக்கு ராஜரிஷிப்பட்டம் கிடைத்ததைக் கம்பர் திரிசங்கு சுவர்க்கத்தின்பின் கூறுகிறார்.

திரிசங்கு குருவாகிய வசிட்ட முனிவனைத் தன்னிடம் வரவழைத்ததாக வால்மீகி கூறுகிறார். கம்பரோ அவனே முனிவன் இருந்த இடத்திற்குச் சென்றதாகக் கூறுகிறார். வால்மீகி கம்பர் இவர்களின் குரு சீட முறைகவனிக்கற்பாலது. குரு இருக்குமிடத்திற்கு மாணவன் செல்லவேண்டியதேமுறை. ஆதலின் கம்பர்மாற்றிக் கூறினர்போலும். வசிட்டன் தன்னால் முடியாதென்று கூறினான் என்று வால்மீகி கூற அதைக்கம்பர் "சுவர்க்கத்துக்கு மாண்டு போதி" என்று கூறினதாகக் கூறுகிறார்.

திரிசங்கு வசிட்ட முனிவனுடைய பிள்ளைகளிடத்துப் போனதையும் அவர்கள் சபித்ததையும் கம்பர் கூறவேயில்லை. வசிட்டனே சபித்தானென அவர் கூறுகிறார். இது வால்மீகி கூறும் கதைக்கு மாறுபட்டது. இனி கம்பர் கூறுகிறபடி வசிட்டனோ அல்லது வால்மீகி கூறுமாறு அவன் மக்களோ திரிசங்கைச் சபித்தது சரியா என்பதை ஆராய்ந்தால் அது ஆச்சரியமாகவே இருக்கிறது. இவனை விடுத்து வேறொருவனை குருவாக அடைய ஒருவன் விரும்பினானால் அதற்காக அவனைச் ‘சண்டாளனாதி’ என்று குரு சபித்தனனேல் அக்குருவின் அறிவும் பெருந்தன்மையும் இருந்தவாறென்னே? இவர்கள் பெரிய முனிவர்களாம்! இவர்களுக்குக் கடவுள் தோன்றி அருளினாராம்!!

திரிசங்கு சண்டாளனானவுடன் அவன் மந்திரிகள் அவனை விட்டுவிட்டு ஓடிவிட்டனராம். அதன்மேல் அவன் விசுவாமித்திரனை

அடைகிறானும். கம்பர் இவ்வரலாற்றை இன்னும் இழிவாகக் கூறு கிறார். அதாவது மன்னன் சண்டாளனாகி ஊரை அடைந்ததாகவும் அவனைக் கண்டவரெல்லாம் சீ! சீ!! என்று இகழ்ந்தனரென்பதும் அதனால் அவன் திரும்பவும் காட்டையடைந்து கோசிகனைச் சந்திக் கிறானென்பதுமாம். வால்மீகிமுனிவர் வரலாறு,கோசிகன் மன்னனை இன்னானென அறிந்துகொண்டு நடந்த வரலாற்றைக் கேட்கிறா னென்பது. இதற்கு மாறாகக் கம்பர் கூறுவது, "சண்டாளா" நீ யார்? உன் வரலாறென்ன? என்று கேட்டனனென்பது.

கோசிகன் செய்த யாகத்திற்கு வசிட்டன் மக்கள் வாராதது பற்றிச் சினந்த அம்முனிவன் அவர்களை, சாம்பலாகி எமனுல கடைந்து எழுநூறு பிறப்பெடுத்து பிணத்தையும் நாயையும் தின்ன வேண்டுமென்று சபிக்கிறான். இம்முனிவர்களுடைய பெருங்குணந் தானென்னே? கம்பரோ இதற்கு மாறாக அக்குமாரர் வேடர்களா கச் சபித்தனரெனவும் கூறுகிறார். மகோதய முனிவனடைந்த சாபத் தைக் கம்பர் கூறுகின்றிலர்.

கோசிகன் திரிசங்குக்காகப் படைத்த சுவர்க்கத்தைக் கண்டு அஞ்சிய தேவர்கள் அந்தச் சுவர்க்கத்தை ஏற்றுக்கொண்டு முனிவ னைச் சாந்தப்படுத்தினரென வால்மீகி கூறுகிறார். கம்பரோ இந்திர னும் நான்முகனும் சிவபெருமானும் ஏனையோரும் முனிவனை யடைந்து சாந்தப்படுத்தியதோடு ராஜரிஷி என்ற பட்டத்தையும் தந் தனர் என்று கூறுகிறார். இதனால் அவர் (கம்பர்) ஆரிய வைணவ ரைத் திருப்தி செய்ய நினைந்தனர்போலும். இனிமேற் செல்லுதும்.

மேலும் இராமனிடம் சதானந்தன் கூறுகிறான்:— விஸ்வா மித்திரன் மேற்குத் திசையில் தவம் செய்துகொண்டு இருக்கும் போது அயோத்தியில் அம்பரீஷன் என்றொரு மன்னனிருந்தான். அவன் ஓர்கால் ஓர் யாகம் செய்ய, அந்த யாகப் பசுவை இந்திரன் திருடிக்கொண்டு போய்விட்டான். அதனால் ருத்விக்குகள் அந்தப் பசுவை கொண்டுவாவில்லையானால் அநேக கொடிய பாவம் வருமென் றும் இல்லையானால் ஒரு நரப் பசுவைக் கொண்டுவரவேண்டுமென் றும் கூறிவிட்டனர். அதனால் அம்பரீஷன் பலவிடங்களிலும் திரிந்து கடைசியாக ருசீகன் என்ற முனிவனையடைந்து அவன் பிள்ளைகளில் ஒருவனை வேண்டினன். அம்முனிவனுக்கு மூன்று பிள்ளைகள்

அம்முனிவன் மூத்த மகனை விலைக்குத் தாமாட்டேனென்றனன். அவன்மனைவி இளைய பிள்ளையைத் தாரேன் என்ன, நடுமகன் தானே வருவதாக ஒப்புக்கொண்டான். உடனே அரசன் முநியவனுக்கு அநேக ஆயிரம் பசுக்களைக் கொடுத்து அப்பிள்ளையை விலைக்கு வாங்கிக்கொண்டு வந்தான். அந்தப் பையன் பெயர் காச்சேபன். வழியில் காச்சேபன் விசுவாமித்திரனைப் பார்த்து தன்னைக் காக்கவேண்டினன். விசுவாமித்திரன் இவனுக்கு மாமன். முனிவன் தன்னுடைய பிள்ளைகளை அழைத்து அவர்களில் யாராவது ஒருவன் காச்சேபனுக்குப் பதிலாகப் போகவேண்டினன். உடனே அவர்கள் தகப்பனைப் பார்த்து அகங்காரங் கொண்டு "நீர் தன் பிள்ளையைக் கொன்று அயலான் பிள்ளையைக் காக்க விரும்பினீர். இது நாயின் மாமிசத்தைதின்பதுபோல தகாத செயலாம்" என்றனர். உடனே முனிவன் சினந்து "நீங்கள் வசிட்டனுடைய பிள்ளைகளைப்போலாகி ஆயிரமாண்டு நாயிறைச்சியைத் தின்றுத் திரிக" என்று சபித்தான். பின் காச்சேபனுக்கு இரண்டு மந்திரங்களை கூறியனுப்பினன். மன்னவன் அப்பிள்ளைக்கு சிவப்பு ஆடை உடுத்தி யூபஸ்தம்பத்தில் கட்டி யாகத்தை நடத்தினன். முடிவில் அந்த மந்திரங்களை அப்பையன் சொல்ல இந்திரன் தோன்றி அப்பையனைக் காப்பாற்றி யாகத்தை ஒப்புக்கொண்டான்.

பின் விசுவாமித்திரன் அங்கேயே ஆயிரமாண்டு தவம் செய்ய நான்முகன் தோன்றி "ரிஷி" என்ற பட்டம் தந்தான். நெடுநாட் கழித்து அந்த மேற்கு திசைக்கு மேனகை என்ற பெண் வந்தாள். அவள் ஓர் குளத்தில் நீராடும்போது முனிவன் அவளைக் கண்டு மயங்கி வேண்ட அவளும் அவனோடு கூடத் தங்கினள். கௌசிகன் அவளோடு பத்தாண்டு கூடியிருந்தான். பின் அவனுக்குத் தான் காம விகாரத்தில் ஈடுபட்டிருப்பது பிழைஎன்பது தோன்றிற்று அதனால் அவன் மனம் வருந்தி அது தேவர்களுடைய கேடு என்று நினைந்து அச்சத்தால் நடுங்கிக்கொண்டிருந்த அந்த மேனகையைச் சபியாமல் இனிய சொற்கூறி அனுப்பிவிட்டான். பின் அம்முனிவன் அவ்விடத்தை விட்டு நீங்கி இமய மலையையடைந்து அங்கே கௌசிகி நதிக்கரையில் தவம் செய்தான். ஆயிரமாண்டுகள்கழிந்த பின் நான்முகன் தோன்றி "மகரிஷி" என்ற பட்டம் தந்தான்.

அதிலும் திருப்தியடையாமல் விஸ்வாமித்திரன் திரும்பவும் கடுந் தவம் செய்தான். அதனால் தேவர்களுக்கும் இந்திரனுக்கும் பெரிய பயம் உண்டாய்விட்டது. இந்திரன் தேவர்களோடு அரம்பையைப் பார்த்து விஸ்வாமித்திரனிடம்போய் அவனை மயக்கும்படி கூறினன். அதற்கு அரம்பை அஞ்சி "முனிவன் கொடிய சாபந் தருவான். ஆதலால் என்னை அனுப்பவேண்டாம்" என்று வேண்டினள். அவ்வாறு கூறி நடுங்கி நிற்கும் அரம்பையைத் தேற்றி தானும் மன்மதனும் குயிலாக வந்து அவளுக்குத் துணைபுரிவதாகக் கூறினன் இந்திரன். அவ்வாறே அரம்பை போய் முனிவனை மயக்க முயன்றுள். இந்திரன் குயிலாகக் கூவினன். அதுகண்டு விசுவாமித்திரன் சந்தேகித்து உண்மையை உணர்ந்து அரம்பையை நோக்கி "நீ பதினயிரமாண்டு கல்லாகக் கடவாய்; உன்னை ஓர் அந்தணன் விடுவிப்பான்" என்று சபித்தான். உடனே அவள் கல்லாய்விட்டாள். அதைக்கண்ட இந்திரனும் அவன் கூடவந்த மன்மதனும் பயந்து ஓடிவிட்டனர்.

பின்னர் கோசிக முனிவன் வடதிசைவிட்டு கீழ்த்திசைசென்று தவமியற்றினன். இந்திரன் பல கேடுகள் புரிந்தும் முனிவன் சினங் கொள்ளாமல் தவம்புரிந்தான். ஓர் நாள் இந்திரன் ஓர் பிராமணனைப்போல உருக்கொண்டு முனிவன் உண்ணும்போது அவ்வுணவை யிரந்தான். முனிவன் தடையின்றி அதைக்கொடுத்துவிட்டுப் பட்டினியிருந்தான். இவ்வாறு கடுந்தவம்செய்த விசுவாமித்திரனிடம் தேவர்களுடைய வேண்டுகோளால் நான்முகன் தோன்றி பிரம்மரிஷிப்பட்டம்தந்து வசிட்டனையும்அதை ஒப்புக்கொள்ளச்செய்தான்.

இவ்வாறு சதானந்தன் விசுவாமித்திரன் வரலாற்றையெல்லாம் சொல்லி முடித்தான். அப்போது மாலைக்காலமாய்விட்டபடியால் சனகமன்னன் முனிவனிடம் விடைபெற்றுச் சென்றுன். விசுவாமித்திரனும் இராம இலக்குவருடன் தாம் தங்குமிடம் சென்றுன். இதுவரை வரலாற்றை ஆராய்வோம்.

---

## பதினென்றும் அத்தியாயம்.

கௌசிகன் மேற்குத் திசையை யடைந்ததும் அம்பரீஷன் என்ற மன்னன் ஓர் யாகம் செய்ய சகானுடைய யாகப் பசுவை

திருடிய பழைய திருடனாகிய கீழ் மகன் இந்திரன், இந்த யாகப் பசுவைத் திருடிப் போய்விட்டான். அதனைத்தேடி காணாத மன்னன் ஓர் நரபசுவைத் தேடினான். இதனால் நரமேதமென்பது அக்காலத்தில் சர்வசாதாரண மென்பது தெரியவருகிறது. நரமேதமானது மனிதனைக்கொன்று நெய்யிலிட்டுப் பொரித்து தின்னும்யாகம் கம்பரோ அம்பரீஷன் யாகப்பசுவை இந்திரன் திருடியதைக்கூறாமல் முதலிலேயே அவன் நரமேதம் செய்யத்தொடங்கினான் என்று கூறுகிறார். இது தவறுதான். கம்பர் பாட்டு வருமாறு:—

"குதைவரிசிலைவாட்டானைக் கோமகன் அம்பரீடன்
சுதைதருமொழியன் வையத்துயிர்க்குயி ராய தோன்றல்
வதைபுரிபுருடமேதம் வகுப்பவோர் மைந்தற் கொள்வான்,
சிதைவிலன் கனகந்தேர்கொண் டடவிக டுருவிச்சென்றான்"

இப்பாடலில் அம்பரீட மன்னன் உலகில் உயிர்க்குயிர்போல மிக நல்லவனென்றும் கொலை வேள்வியாய புருடமேதம் செய்யத் துணிந்து விலைக்குவாங்கப் பொன்னொடு போனான் என்று கூறப்பட்டுள்ளது. உயிர்க்குயிரான மன்னன் கொலை வேள்வியிலும் மிகக் கொடியதாய புருடமேதத்தை எவ்வாறு செய்யத் துணிந்தனனோ தெரியவில்லை கம்பர் மன்னனை முதலில் நல்லவனென்று கூறிவிட்டுப் பின் அதற்கு மாறாகக் கொலையிற் கொடியான் என்றார். இது எவ்வாறு பொருந்துவதோ? மனிதனைக் கொன்று அவ்வுடலைத் தின்பதாய இக்கொடிய வேள்வியைச் செய்தோர் இழிதகைமைதானென்னே? இவ்விழிதகைய கதைகளை மிகநல்லனவென்று பாராட்டிப் படிப்போரை அறிவிலரென்று கூறவோ, அன்றி இழிகுணரென்று புகலவோ அறிகிலம். அறியாமை என்றே கூறி அமைவோம்.

மன்னன் நரவேள்விக்காக ஓர் மனிதனை விலைக்கு வாங்கினான். ஆடுமாடுகள் விலைக்கு வாங்குவதுபோல மனிதர்களையும் விலைக்கு வாங்குவது அக்காலத்து ஆரியர் பழக்கம்போலும்! அரசாங்கத்தார் தடை செய்யாதிருப்பாரேல் இக்காலத்திலும் மனிதர்களை விலைக்கு வாங்கவும் நரவேள்வி நடத்தவும் செய்வார் போலும்!

மன்னன் விலைக்கு வாங்கி வந்த பையன் விஸ்வாமித்திரனைத் தஞ்சமடைந்தான். முனிவன் தன் மக்கள் நால்வரில் ஒருவனை அவனுக்குப் பதிலாக அனுப்ப முயல்கிறான். அவர்களோ தம் தந்தை

செயலை இகழ்ந்து, அது நாயிறைச்சியைத் தின்னலினும் கேடு கெட்ட தென்கின்றனர். உடனே முனிவன் தன் மக்களை நாயிறைச் சியைத் தின்று பலகாலமலைய சபிக்கிறான். முனிவனுடைய மக்கள் கூறிய கூற்றுகளைக் கம்பர் கூறாது மறைத்து "அவர்கள் மறுத் துப் போயினர்; தந்தை சபித்தான்" என்று மட்டும் கூறுகின்றனர் கோசிகன் முன்னரும் வசிட்டன் மக்களை நோக்கி "நாயிறைச்சி யைத்தின்று திரிக" எனச் சபித்தமை கண்டோம். இது இம் முனி வனுக்கு நாயிறைச்சி தின்ற வாசனையாலெழும் சொற்கள் போலும், அதும்வுநாய்வாலைத் திருடி இவ்விசுவாமித்திரன் உண்டவனாவான்.

"நாய்வாற் களவினால் ஞாலமிகழப்பட்டான்
தூயனும் காதிமகன்"

என்கிறது சோமேசர் முது மொழி வெண்பா.

அம்பரீஷனது யாகத்தின் பின்னரும் கௌசிகன் மேற்குத் திசையில் தவம் செய்துகொண்டிருந்தான். அப்போது மேனகை யுடைய மையலிற்பட்டான். பின் உண்மை யறிவுற அவளைச் சபிக் யாது இனியசொற்கூறியனுப்பினான். இதற்கு மாறாகக்கம்பர் கூறு கிறார். இச்செய்தி கிழக்குத்திசையில் நடந்ததாகக் கூறுவதோடு அவளை முனிவர் மண்ணில் மனிதப் பிறப்பெடுக்கச் சபித்தானென் றும் கூறுகிறார். அதோடு வால்மீகி மேனகையென்று கூற கம்பர் திலோத்தமை யென்று அப்பெண்ணை மாற்றிக்குறித்தார் மிகவும் பொறுமையுடையாகிய வால்மீகி கூறும் விசுவாமித்திரனைக் கம்பர் கொடிய கோபக்காரனாகக் காட்டியது வியப்பே.

முனிவன் வடதிசையை யடைந்தபோது திருட்டுக்காமி இந்தி ரன் அரம்பையை ஏவி முனிவனை மயக்கத் தூண்டுகிறான். பின் அரம்பை தண்டனை யடையக்கண்டு பயந்தோடுகிறான். இத்தீயோ னைநம்பி அரம்பை சென்றது மண்குதிரையை நம்பி ஆற்றிலிறங்கி யது போலாயிற்று. இக்கதையை கம்பர் முற்றிலும் கூறாது விட்டு விட்டார்.

தன்னுடைய தவத்தைக்கெடுத்த மேனகையைச்சபித்துவிடுத்த முனிவன் தன்முன் வந்து நின்ற அரம்பையைக் கல்லாய்கிடக்கச் சபிக்கிறான். இக்கதையைத்தான் கண்டு மயங்கிக் கம்பர், அகலி கையை முனிவன் கல்லாய் கிடக்கச் சபிக்கின்றனனென்று கூறினார்

போதும். வடதிசையில் மேலேகண்ட நிகழ்ச்சிகள் நடந்திருக்க இவைகளை யெல்லாம் கூருது இத்திசையில் முனிவன் பிரமரிஷிப் பட்டம்பெற்ருன் என்கிருர் கம்பர். வால்மீகியோ அவன் கீழ்திசை சென்று கடுந்தவம் புரிந்து அப்பட்டம் பெற்ருனென்கிருர்.

கீழ்த்திசையில் இந்திரன் உணவிரந்தது முதலிய செயல்களைச் செய்தமையைக் கம்பர் விடுத்தார். நான்முகன் பிரமரிஷிப்பட்டம் தந்தபின் கோசிகன் அவனை நோக்கி வசிட்டன் அதனை ஒப்புரைத் தல்வேண்டுமென்றுகூற அவ்வாறே அவ்வசிட்டன் கோசிகன் முன் வந்து ஒப்புகின்றனன். இவ்வரலாற்றையும் கம்பர் கூருது விடுத்த னர். இவ்வாறு இவ்வரலாற்றிலும் கம்பர் பல மாறுபாடுகள் செய் தமை புலனுகின்றது. இனிமேற் செல்லுதும்.

மறுநாள் காலையில் விசுவாமித்திரன் சனகமன்னனை நோக்கி இராமனும் இலக்குவனும் சனகனிடமிருந்து வில்லைப்பார்க்க விரும்பு வதாகக் கூறினன். உடனே சனகன் "முன்னொரு காலத்தில் தக் கன் என்பவன் ஓர் யாகம் செய்தான். அந்த யாகத்துக்கு எல்லாத் தேவர்களும் வந்திருந்தார்கள். சர்வேஸ்வரனுகிய சிவபெருமான் அந்த யாகத்துக்கு அழைக்கப் பெறவில்லை. அதனுல் அவர் கடுங் கோபங்கொண்டு வில்லை வளைத்து நாணேற்றி ஏனைய தேவர்களு டைய தலைகளை அறுத்துத் தள்ளிவிடுவதாகக் கூறினுர். அப்போது எல்லாத் தேவர்களும் அஞ்சி அம்மகா தேவரைச் சரணமடைந்து துதித்தனர். அதனுல் சிவபெருமான் சினந்தணிந்து அவர்களிடத் தில் அன்பு கொண்டு அவ்வில்லைக்கொடுத்து விட்டார். அவர்கள் அதை என்னுடைய முன்னோருள் ஒருவனுகிய தேவராதனிடம் வைத்து வைக்கும்படி கொடுத்தனர். அவ்வில்லே இது. பிறகு நான் ஓர் கால் யாகம் செய்யும்போது கண்டெடுத்த சீதை என்ற பெண்ணை, இவ்வில்லை வளைத்து நாணேற்று பவனுக்குக் கலியாணம் செய்து கொடுப்பதாகக் கூறினேன்.

பல மன்னர் இதை வளைக்க முயன்று அவமானமடைந்து என் னேடு போரிட்டனர். நான் தோல்வியுற்றுப் பின்தேவர்களுடைய உதவியாலே பெற்ற சேனைகளால் அவர்களை வென்றேன். அது முதல் இவ்வில் வளைக்கப் பெருமலிருக்கிறது. இவர்கள் இதை வளைத்தால் இவர்களுக்குச் சீதையைக் கொடுப்பேன்" என்று கூறி

னன். அவ்வில் வைத்திருந்த இரும்புப் பெட்டிக்கு எட்டுச் சக்கரங்கள் உண்டு. அதை ஐயாயிரம் பேர்கள் இழுத்து வந்தனர். தேவர்களாலும், அசுரர்களாலும், ராக்ஷஸர்களாலும் ஏனையோராலும் எடுக்கமுடியாத அவ்வில்லை இராமன் ஓர் கரத்தால் தூக்கி நிறுத்தி வளைத்தான். வில்லும் ஒடிந்தது. அவ்வொலிகேட்டு பூமி நடுங்கிற்று. எல்லோரும் மூர்ச்சை யடைந்தனர். சனகன் மிக மகிழ்ந்து தனது மகளை அவனுக்குத் திருமணம் முடிக்கத் தீர்மானித்து முனிவனுடைய சம்மதி பெற்று தசரதனை அழைத்து வர அயோத்திக்கு மந்திரிகளை அனுப்பினன்.

அந்தத் தூதர்கள் நான்காம்நாள் அயோத்தியை யடைந்து தசரதனைக்கண்டு பல அரசர்களாலும் வளைக்கமுடியாதவில்லை இராமன் வளைத்துச் சீதையை மணக்க உரியவனான செய்தியைக் கூறி மிதிலைக்கு அழைத்தனர். மறுநாள் தசரதன் அயோத்தியை விட்டுப் புறப்பட்டு ஐந்தாம்நாள் மிதிலையை யடைந்தான். சனகன் அவனுக்கு முகமன் கூறி உபசரித்தான். தசரதன் தன் மக்களைக் கண்டு மகிழ்ச்சி யடைந்தான்.

பின் சனகன் தனது தம்பியாகிய குசத்துவசனை அழைத்துவரத் தூதரை அனுப்பினன். அவர்கள் இந்திரனது கட்டளைப்படி திருமாலை அழைத்துவரச் செல்லும் தேவர்களைப் போலச் சென்று அவனை அழைத்து வந்தனர். சனகனும் குசத்துவசனும் தசரதனை அழைத்துவரச் சொல்ல அம்மன்னனும் தனது புரோகிதனுடன் வந்து சேர்ந்தனன். தசரதனுடைய வேண்டுதலினலே வசிட்ட முனிவன் தசரதனுடைய குலக்கிரமத்தைக் கூறினன்.

தசரதன் குலமுறை பின் வருவாறு:—பிரமன், மரீசி, காசியபன், சூரியன், மநு, இக்ஷ்வாகு, குட்சி, விகுட்சி; பாணன், அநரண்யன், பிருது, திரிசங்கு, துந்துமாரன், மாந்தாதா, சுசந்தி, துருவசந்தி, பரதன், அசிதன், சகரன், அசமஞ்சன், அஞ்சுமான், திலீபன் பகீரதன், ககுத்தன், ரகு, பிரவிருத்தன் (இவன் வசிட்டனல் சபிக்கப்பெற்று ராக்ஷசனானவன்), சங்கணன், சுதர்சனன், அக்கினிவர்ணன், சீக்கிரகன், மரு, பிரசுச்ருகன், அம்பரீடன், நகுடன், யயாதி நாபாகன், அசன், தசரதன்.

இக்கோடி வழியைக்கேட்ட சனகன் தனது கோடி வழியையும் கூறினன். அது வருமாறு:—நிமி, மிதி, உதாவசு, நந்திவர்த்தனன், சுகேது, தேவராதன், பிருகத்ரதன், மகாவீரன், சுத்ருதி, திருட்டகேது, ஹர்யச்வன், மரு, பிரதிந்தகன், கீர்த்திரதன், தேவமீடன், விபுதன், மகிதரகன், மகாரோமன், சுவர்னரோமன், ஹிரஸ்வரோமன், சனகன். இவ்வாறு கலியாணத்தின் முன் கொடிவழி கூறுவது மரபு.

இக்கோடி வழியைக்கூறி சனகன் "என் மகள் சீதையைக் கேட்டு நிர்ப்பந்தித்த சாங்காச்ய நகர மன்னனைக் கொன்று எனது தம்பி குசத்துவசனை அவ்வூருக் கரசனாக்கினேன். எனது தலை மகள் சீதையை இராமனுக்கும், இளையவள் ஊர்மிளையை இலக்குவனுக்கும் தருகிறேன். இதுவே நிச்சிதார்த்தம்" என்று புகன்றனன். அதகேட்ட விசுவாமித்திரன் "மிக நன்று. உனது தம்பி பெண்களை பரதனுக்கும் சத்துருக்கனுக்கும் கொடுக்கவேண்டும்" என்று சொன்னன். சனகனும் அதற்கு இணங்கினன். பின் தசரதன் தான் இறங்கி இருக்கிற இடத்துக்குப்போய் கோதான முதலியன செய்திருந்தான். மேலே கண்ட வரலாற்றை ஆராய்வோம்.

முதலில் சனகன் வில் வரலாறு கூறுகிறன். அதாவது தக்கன் வேள்வியைத் தகர்த்தற்காக இவ்வில்லைச் சிவபெருமான் வளைத்ததாகவும் தேவர் பணியச் சீற்றம் தணிந்து அவ்வில்லை வானவரிடம் தந்ததாகவும் வானவர் அதை சனகன் முன்னோனை தேவராதனிடம் தந்ததாகவுமாம். வால்மீகி தக்கன் வேள்வி தகர்த்ததற்குக் காரணம் சிவபெருமானுக்கு அவிர்ப்பாகம் தாரதென்பர். கம்பரோ,

"இமையவில் வாங்கிய வீசன் பங்குறை
உமையினை யிகழ்ந்தன னென்ன ஓங்கிய
கமையறு சினத்தனிக் கார்முகங் கொளாச்
சமையுறு தக்கனர் வேள்வி சாரவே"

என்று உமையைத் தக்கன் இகழ்ந்ததே காரணம் என்பர். தேவர்கள் யாதொரு இடையூறுமடையாமல் பணிந்தவுடன் சிவபெருமான் சீற்றம் தணிந்தனர் என்பர் வால்மீகி. கம்பரோ, "தேவர்களுடைய பல்லும் கரங்களும் உடைந்தன; அதனல் அவர்கள் புகாத இடங்களிலெல்லாம் ஓடி ஒளிந்தனர்; தக்கன் வேள்வி சிதைந்தவுடன் சிவ

பெருமான் முனிவு மாறிற்று" என்று கூறுவர். வால்மீகி அவ்வில்லை ஈசன் தேவர்களிடம் தர அவர்கள் தேவராதனிடம் தந்தனரென் பர். கம்பரோ ஈசனே நேரில் தேவராதனிடம் தந்ததாகக்கூறுகிறார்.

இவ்வில் வரலாறு வால்மீகி பாலகாண்டம் அறுபத்தாறுவது சருக்கத்தில் கூறப்பெறுவது இவ்வரலாற்றுக்கு முற்றிலும் மாறு பட்ட வரலாறு எழுபத்தைந்தாவது சருக்கத்தில் கூறப்படுகிறது. அதாவது இராமன் முன் தோன்றிய பரசுராமன் அவனை நோக்கி "விஸ்வகர்மா இரண்டு விற்களைச் செய்தான். அவைகளில் ஒன் றைச் சிவபெருமானும் மற்றொன்றைத் திருமாலும் கொண்டனர். தேவர்கள் சிவ விஷ்ணுக்களின் பலாபலத்தை அறிய எண்ணி நான் முகனைக்கொண்டு அவ்விருவருக்கும் போர் மூட்டிவிட்டனர். அதன் படியே இருவரும் சண்டை செய்ய சிவபெருமான் வில் முறிந்து திருமால் ஓர் சத்தமிட அதைகேட்டுச் சிவன் அடங்கி நின்றுவிட் டார். அப்போது தேவர்கள் வேண்டுதலாலே சண்டை நின்றது. தமது முறிந்த வில்லைச் சிவபெருமான் தேவராதனிடம் தந்தனர். திருமால் தமதுவில்லை எனது பாட்டனாராகிய ருசீகனிடம் தந்தனர். அம்முனி தனது மகனான எனதுதந்தை சமதக்னியிடம் தந்தனன்" என்று கூறினதாக வருகிறது. இவ்விரண்டு வரலாறுகளும் தம்முள் மாறுபடுகின்றன. இப்பின்னைய வரலாற்றையும் கம்பர் பரசுராமப் படலத்தில் கூறுகின்றார். அதிலும் சில மாறுபாடுகள் காணப்பெறு வன. நான்முகனிடம் தேவர்கள் அவ்விரு விற்களில் வலியதெது வென வினவ, அவ்விற்களைக் காரணமாக ஏற்றி ஈசனுக்கும் திருமா லுக்கும் சண்டை மூட்டிவிட்டானெனக் கம்பர் கூறுகிறார். தமது வில் முறிந்தபின் திருமாலுடைய சத்தத்தைக்கேட்டு சிவன் அடங்கி நின்றார் என்ற வால்மீகி கூற்றுக்கு மாறாகக் கம்பர், திரும்பவும் சிவனார் சண்டை தொடங்கினாரெனக் கூறுகின்றார். மேலும் கம் பரோ சிவனார் தமது வில்லைத் தேவேந்திரன் கையிற் கொடுத்தன ரெனக் கூறுகின்றார். இவ்வாறு பலவகையிலும் கம்பர் மாறுகின் றார். நிற்க:—

தக்கன் வேள்வியைத் தகர்த்தவுடன் சிவனார் தமது வில்லை தேவர்களிடம் கொடுத்தனரென்பது உண்மையா? மேலும் தேவ ராதனிடம் தேவர்கள் வில்லைக் கொடுத்தனரென்பது உண்மையா?

பின்னருள்ள கதை வைணவப்பற்று மிக்கவுடையோராற் கட்டப் பட்டது போலக் காணப்படுகிறது. சீதையின் பிறப்பைப்பற்றிப் பின்னர் ஆராய்வோம்.

சீதை பிறந்து பெண்ணாகி அவளுடைய அழகில் பல மன்னர் ஈடுபட்டு அவளை மணக்க வந்து அவமானப்பட்டு சனகனுடன் சண்டையிட்டு முதலில் வென்று பின் பலகாலம் ஒருவரும் வாராமல் சனகன் தன் மகளுக்கு மணாளன் வாய்ப்பானோ என ஏங்கியிருக்கிற காலம் இராமன் பதினாறு வயது வாலிபனாகி வில்லை வளைத்த காலம். ஆதலின் எவ்வாற்றானும், இராமன் சீதைக்கு இளையவனாகவே காணப்படுகிறான். ஆகையினாலே இராமன் தனக்குச் சில ஆண்டுகளேனும், ஏன் பல ஆண்டுகள் வயதில் மூத்தவளாகிய சீதையையே மணந்துகொள்கிறான். சீதையை மணக்க இராமனுக்கு முன்னர் பல தேவர், அசுரர் முதலியோரும் முயன்றிருப்பதாகத் தெரியவருகிறது.

கம்பர் கூறும் எழுச்சிப் படலம், வரைக்காட்சிப் படலம், பூக்கொய் படலம் நீர் விளையாட்டுப் படலம், உண்டாட்டுப் படலம், எதிர்கோட்படலம் முதலியன அவருடைய கற்பனைகளே. வால்மீகியார் சுருக்கமாக 5-ம் நாள் தசரதன் மிதிலையை யடைந்தானென்பதையே கம்பர் பல நூறு கவிகளால் கற்பித்துப் பாடுகின்றார்.

தசரதனை சனகனும் இராமன் முதலியோரும் எதிர்கொண்டனரெனக் கம்பர் கூறுவது வால்மீகி கூற்றுக்கு மாறுபட்டது. உலாவியற்படலமும் கம்பர் கற்பனையே. தசரதனே தன் மக்களிருக்குமிடம் சென்று அவர்களைக் கண்டு மகிழ்கின்றான் என்பர் வால்மீகி.

தசரதன் வேண்டுதலினாலே குலமுறையை வசிட்ட முனிவன் கிளத்துகின்றனனென அதன் விபரமெல்லாம் வசிட்டன் வாயாலேயே வால்மீகி கூறுகிறார். திருமணத்தின்முன் இவ்வாறு குலமுறை கிளத்துவது மரபு என்றும் அவர் வரைந்துளர். இதற்கு மாறாக வில்லை இராமன் முறிப்பதன் முன்னரே குலமுறை கிளத்து படலமென்றொரு படலத்திலே இராமனுடைய குல வாலாற்றை விசுவாமித்திரன் கூறியதாகக் கம்பர் கூறுகிறார். அவ்வரலாற்றில் சில மன்னரே கூறப்பெறுவர். ஆனால் அவர்கள் செய்த செயல்

களை (வால்மீகி ஒன்றும் கூறாதிருக்க) கம்பர் கூறுகிறார். சனகன் கூறிய குல முறையைக் கம்பர் கூறவேயில்லை.

குலமுறை கிளத்துப் படலத்தில் கம்பர் இராமன் பிறந்த வரலாற்றை விரித்துக்கூறுகிறார். அது இவ்விடத்துக்கு வேண்டாததே. அவ்வாறு கூறுமிடத்துக் கம்பர் பின்வரும் பாடலொன்று கூறுகிறார்.

"சிலைக்கோட்டு நுதற் குதலைச் செங்கனிவாய்க் கருநெடுங்கண்
விலைக்கோட்டும் பேரல்குன் மின்னுடங்கு மிடையாரை
முலைக்கோட்டு விலங்கென்றங் குடனணுகி முன்னின்ற
கலைக்கோட்டுப் பெயர்முனியாற் றுயர்நீங்கக் கருதினான்"

இப்பாடலில் தாசிப்பெண்களைக் கலைக்கோட்டு முனிவன் தனங்களாகிய இரண்டு கொம்புகளுடைய மிருகங்களென்று நினைத்தானெனக் கூறுகிறார். இதனால் கலைக்கோட்டு முனிவனுடைய கல்வியும் அறிவும் எவ்வளவு சிறந்தனவென அறியலாம். இனி மேற் செல்லுதும்.

---

# பன்னிரண்டாம் அத்தியாயம்.

---

திருமணத்திற்கு வேண்டிய ஏற்பாடுகள் நடந்துகொண்டிருந்த சமயத்தில் கேகய மன்னன் மகனும் பரதனுக்கு தாய்மாமனுமான யுதாசித்தென்பான் வந்து சேர்ந்தனன். அவன் பரதனை அழைத்துப்போக அயோத்தி வந்து திருமணச் செய்தியறிந்து மிதிலைக்கு வந்ததாக கூறினான்.

எல்லாரும் கலியாண மண்டபத்திற்கு வந்து சேர்ந்தனர். சனகன் தனது பெண்களை உரியவர்களுக்குக் கைபிடித்துத்தந்து தாரை வார்த்துக் கொடுத்தான். மாப்பிள்ளைகள் நால்வரும் தங்கள் தங்கள் மனைவியரைக் கையிற்பற்றிக்கொண்டு மூன்றுமுறை தீயைவலம் வந்தனர். இவ்வரலாற்றை ஆராய்வோம்.

சீதையும் இராமனும் திருமண மண்டபத்திலே தான் முதன்முறை சந்தித்ததாக வால்மீகி கூறுகிறார். வில்லை எவன்வளைப்பானோ அவனுக்கே தன் மகளை மணமுடிப்பதாகச் சனகன் கூறியுளன். அதன்படி வில்லை வளைத்த இராமனைச் சீதை மணக்கிறாள். இவ்

வாறு நடக்கும் திருமணத்தில் மாப்பிள்ளை பதினாறு வயதுடையவனாகவும் பெண் முப்பது வயதுடையவளாகவும் அமையலாம். அன்றி மாப்பிள்ளை எழுபது வயதுடையவனாகவும் பெண் பதினாறு வயதுடையவளாகவும் அமையவும் கூடும்60000வயதின்மேலவனான தசரதன் வளைத்திருந்தால் அந்தச் சிறுபெண் அவனுக்கே மனைவியாக நேருமன்றோ. இக்கதை இவ்வாறுளதென்றால் வயதில் மூத்தவளாகிய சீதை இளையவனான இராமனுக்கு மனைவியாக வாய்க்கிறாள் என்றே உள்ளது. இவ்வாறு நேரும் மணவினையுள் அன்பு எவ்வாறு நிகழும்? இவ்வாறுள்ளது வால்மீகி கூறும் மணவினை நிகழ்ச்சி. கம்பர் இக்கதையை எவ்வாறு கூறுகிறாரெனப் பார்ப்போம்.

கம்பர் கூறுவது வால்மீகி வரலாற்றுக்கு முற்றிலும் மாறுபட்டதே. அவர் இராமனும் சீதையும் முதன் முதல் இராமன் மிதிலையில் நுழையும்போதே சந்தித்தனர் என்று கூறுகிறார். அவர்கள் சந்தித்தபோது அவர்கள் ஒருவர்மீதொருவர் மெய்க்காதல்கொள்கின்றனரென்றார். அப்பாடல் வருமாறு:—

> "எண்ணரு நலத்தினா ளினைய நின்றுழி
> கண்ணொடு கண்ணிணை கௌவி யொன்றையொன்
> றுண்ணவு நிலைபெறா துணர்வு மொன்றிட
> அண்ணலு நோக்கினா னவளு நோக்கினாள்"
>
> "வரிசிலை யண்ணலும் வாட்க ணங்கையும்
> இருவரு மாறிப் புக் கிதய மெய்தினர்."

இவ்வாறு கூறியகம்பர் மேலும் இவ்வன்பின் செயல்களை விரிக்கின்றார். இராமன் பிரிந்தவுடன் சீதை அவனைநினைந்து வருந்துவதும் அந்திமாலையும் சந்திரோபாலம்பனமும் கம்பர் கூறுகிறார். இராமனும் தனியிடமடைந்து சீதையைநினைந்து நினைந்து ஏங்குவதாகவும் கூறுகிறார்.

பின்னர் இராமன் வில்லை முறிக்கின்றனன். அச்செய்தியை ஓர் தோழி கூறக் கேட்டுச் சீதை அவ்வாறு வில்லை முறித்தவன் இராமனாகத்தான் இருக்கவேண்டுமென்றுகுறிப்பில் உணர்ந்தனளேனும் சற்று ஐயமும் கொண்டாள். அதனால் தன் உளம் கவர்ந்த காதலன் அல்லாமல் வேறொருவன் வில்லை வளைத்திருந்தால் அவனை மணக்காது உயிர்விடுவதெனத் தீர்மானிக்கிறாள்.

"சொல்லிய குறியினத் தோன்றலேயவன்
அல்லனே லிறப்பனென்ற கத்துளுன்னுவாள்"
[இது கம்பர் கூற்று.]

இனி கம்பர் இத்தோடு அமையாது திருமணத்தின் முக்கிய நாளில் இராஜசபையிலே இராமனும் சீதையும் சந்திக்குமாறு முனிவன் செய்தனனென்றும் ஒருவரை யொருவர் மறுமுறை காண்கின்றனரென்றும் கூறுகிறுர். இராமன் சீதையைக்கண்டு மகிழ்கிறுன். சீதையும் தன் கைவளையைத்திருத்துபவள் போலக் கடைக்கண்ணுல் இராமனை நோக்கி தன் மனத்திலிருந்த ஐயம் நீங்கி மகிழ்ச்சி யடைகிருள். பின் மறுநாள் திருமணம் நடைபெறுகிறது.

இவ்வாறெல்லாம் கம்பர் கதையை மாற்றி இம்மண நிகழ்ச்சியைத் தமிழ்நாட்டு மணமாகக் காட்டுகிறுர். இது பாராட்டத் தகுந்ததேனும் அந்நிய நாட்டுக் கதையை மாற்றி மயக்கி விடுதலாலே கம்பர் செயல் வெறுக்கத்தகுந்ததே. ஏனெனில் இவ்வாறெல்லாம் இவர் மாற்றி மயக்காதிருப்பரேல் தமிழ் மக்கள் தம் தமிழ் நாட்டுக் கதைகளையே பாராட்டிப் பார்த்து மகிழ்வார். இவ்வுண்மைத் தன்மையையும் உணர்ந்து இராமாயணத்தின் உண்மைத் தன்மையையும் உணர்ந்து அதைப் பாராட்டாதிருப்பார். இதனுல் விளைந்துள தீமைகள் தமிழ் மக்களுக்குப் பல. இனியேனும் அறிஞர் தவருதிருக்குமாறே இம் மெய்யாராய்ச்சி வெளிவருகிறது. இனிமேற் செல்லுதும்.

திருமண முடிந்த மறுநாள் விசுவாமித்திரன் விடைபெற்றுக் கொண்டு இமயமலையை யடைந்தான். தசரதன் அயோத்தியை நோக்கிப் புறப்பட்டான். சனகன் தனது குழந்தைகளுக்கு பல பொருள்கள் தந்து வழியனுப்பச் சிறிதுதூரம் சென்று திரும்பினுன். சிறிதுதூரம் சென்றவுடன் தசாதனுக்கு முன்னுல் விண்ணில் பறவைகள் பேரிரைச்சலிட்டன. மண்ணில் மிருகங்கள் வலம் சுற்றிப் போயின. மன்னன் அதுகண்டு திகைத்து நின்று வசிட்டனிடம் அதன் பலனை வினவினன். வசிட்டன் அவனை நோக்கி "பறவைகள் கூச்சலிடுவதால் நமக்கு ஓர் ஆபத்து விளையுமென்றும் மிருகங்கள் வலம் வருவதால் அது நீங்கிவிடுமென்றும் அறியலாம்" என்று கூறினன். அப்போது மிகவும் கடுமையான தோற்றத்து

டன் பரசுராமன் அங்கே தோன்றினன். முனிவர்களெல்லோரும் அவனைக்கண்டு அவன் முன்னரே அரசரைக்கொன்று சினம் தணிந்தபடியால் இப்போது கேடு செய்யான் என்று பேசிக்கொண்டு "அவனை வரவேற்று இன்சொற் கூறினர். பரசுராமனும் அவர்கள் பூசையை யேற்று தசரதனுடைய மகனுன இராமனைப் பார்த்து இராமா! நீ வில்லை முறித்த செய்திகேட்டு உன் வலுவில் ஐயங்கொண்டு இங்கே வந்தேன். உனக்கு உண்மையான பலமிருந்தால் நான் கொண்டு வந்திருக்கும் இந்த வில்லை வளைத்து நாணேற்று; நாணேற்றிவிட்டாயாயின் நான் உன்னுேடு கைச்சண்டை செய்கிறேன்'' என்று கூறினன்.

அப்போது தசரதன் மிக அஞ்சி "ஆயுதத்தைக் கையிலெடுப்பதில்லையென்று இந்திரனிடம் வாக்குரைத்துப் பிராமணராயிருந்த நீர் இராமனைக் கொல்வீராகில் நாங்களெல்லோரும் இறந்துவிடுவோம்; காத்தருளவேண்டும்'' என வேண்டி நின்றனன். பரசுராமனே அச்சொல்லை செவிகொள்ளாமலே இராமனை நோக்கி மேலும் சிவன் வில் திருமால் விற்களின் வரலாறு கூறி "நான் வைத்திருக்கும் இத்திருமால்வில்லை வளைத்து இந்த அம்பைத் தொடு; உன் வல்லமையை அறிந்து நான் உன்னுேடு கைச்சண்டை யிடுகிறேன்'' என்று சொன்னன். இராமன் அவனை நோக்கி "உன் தந்தையைக் கார்த்த வீரியார்ச்சுனனென்னும் ஒருவன் கொல்ல அதற்காக நீ அரசர்களையெல்லாம் கருவறுத்தது நன்று. தந்தைக்கு கேடு செய்தோரை வேரோடு அழித்தல் பிள்ளைகளின் கடமையே. ஆனுல் நீ என்னை இப்போது மிகவும் அவமரியாதையாகப் பேசினுய், அதனுல் என்னுடைய வல்லமையைக் காட்டுகிறேன் பார்'' என்று அவ்வில்லை வாங்கி வளைத்து அம்பைத் தொடுத்து கோபத்துடன் பின்னரும் "இந்த அம்பு உன் உயிரை வாங்கவல்லதாயிருந்தாலும் நீ பிராமணனுகவும் விசுவாமித்திரனுக்கு வேண்டியவனுகவும் இருந்த நிலையே உன்னை விட்டேன். ஆனுல் இந்த அம்பு வீண்போகாது. அதனுல் நீ நடப்பதற்கு ஏதுவான உன் காலிலுள்ள சக்தியையாவது அல்லது உன் தவ வலியையாவது அடிக்கப் போகிறேன்; உனக்கு எது சம்மதம்'' என்று கேட்டான். பரசுராமனே திருமால் சம்பந்தமான தன் வலிமையை இழந்து திகைத்துத் தன் காலை

விடுத்து, தவவலியை அழிக்கச் சொன்னன். இராமனும் அவ் வாறே செய்தான். பரசுராமன் மகேந்திர மலையை அடைந்தான். தசாதன் தானும் தன் பிள்ளைகளும் பிழைத்தது மறுபிறப்பென்று எண்ணிக்கொண்டு எல்லோருடனும் அயோத்தியை அடைந்தான். சிலநாள் கழிந்தபின் தசாதன் பாதனை அழைத்து "உன் மாமனுன யுதாசித்து உன்னை அழைத்துப்போக இங்கே வந்திருக்கிருன் என்று கூறினன். அதுகேட்ட பாதன் தன்னேடு சத்துருக்கனை அழைத் துக்கொண்டு கேகய தேசத்தை அடைந்தான். பின்னர் இராமன் குடிகளுக்கு வேண்டிய நன்மைகளைச்செய்துகொண்டு அவர்களுக்கு மிகவும் வேண்டியவனுக நடந்து அவர்களுடைய பிரீதியைத் தேடிக் கொண்டிருந்தான். குடிகளும் இராமனிடம் மிகவும் பிரியத்தைப் பூண்டார்கள். இவ்வரலாற்றை ஆராய்வோம்.

மேலேகண்ட வாலாற்றில் சனகன் தசாதனுக்குப் பின் வந்து வழியனுப்பிய செய்தியைக் கம்பர் கூறவில்லை. பின் அரசன் கண்ட சகுனத்தைப்பற்றி வால்மீகி கூறுகிருர். அவைகளில் பறவைகள் சத்தமிட்டது கேட்டினையும், மிருகங்கள் சுற்றிப்போனது நன்மை யையும் தருவனவாம். இவ்வுண்மைக்கு மாருகக் கம்பர் கூறுகிருர். அச்செய்யுள் வருமாறு:—

"ஏகும்மள வையின் வந்தன வலமும் மயிலிடமும்
காகம் முதலிய முந்திய தடை செய்வன கண்டான்
நாகம்மன னிடையிங்குள திடையூறென நடவான்
மாகம்மணி யணிதேரொடு நின்ருன் நெறி வந்தான்"

இதனுல் மயில் வலமும் காகம் முதலிய பறவைகள் இடமும் சென்று தடை செய்தன, அதனுல் இடையூறு வருமென தசாதன் உணர்ந்தான் என்பதே அறியலாம். ஆகையினுலே வருமிடையூறு விலகுவதையுணர்த்தும் நற்சகுனமாக மிருகங்கள் வலம் சுற்றிப் போனதைக் கம்பர் கூருது விடுத்தார். இடையூறு வருமென உணர்ந் தான் தசாதன் என்று கூறிய கம்பர் அடுத்த பாட்டாக

"நின்றே நெறியுணர்வானெரு நினைவாளனை யழையா
நன்ருே பழுதுளதோநடு வுரைநீ நயமென்னக்
குன்றே புரைதோளானெதிர் புள்ளின்குறி கொள்வான்
இன்றே வருமிடையூறது நன்ருய்விடு மென்ருன்"

"இன்றேவரு மிடையூறது நன்ருய்விடுமென்ருன்" என்றுகூறி யிருக்கிருர். தான் கண்ட சகுனமாகிய மயிலின் வலப்போக்கும் காகத்தின் இடப்போக்கும் தடைகளே. அவைவரும் இடையூற்றை உணர்த்துவன என்று தீர்மானமாக உணர்ந்த தசரதன் புட்குறியாளனை அழைத்து தான் செய்த தீர்மானம் சரியா பிழையா என உணர்ந்துகொள்ளும்படி உள்ளதைக் கூறுமாறு கேட்கின்றனன். இதற்கு மறுமொழியாக அப்புட்குறியாளன் "இடையூறு வரும்; ஆனுல் அது நீங்கிவிடும்" என்று புகன்றனன். இதில் கம்பர் முதற் பாட்டில் கூறியபடி மயில் வலமானதும், காகம் இடமானதும் தடையாயிருக்க வரும் இடையூறு நீங்கிவிடும் என்பதை புட்குறியாளன் எக்குறி கொண்டு இயம்பினனே தெரியவில்லை. ஆதலின் "அது நன்ருய்விடும்" என்று கூறுவதற்கு ஆதாரமில்லை. இதனுல் வால்மீகி கூறுவதை நன்ருக உணராமலே கம்பர் கூறியவராவார்.

# பதின்மூன்ரும் அத்தியாயம்.

வால்மீகியோ பறவைகள் விண்ணில் கூச்சலிட்டன என்று கூறுகிருர். அதையே கம்பர் 'மயில் வலமும், காகம் இடமும் சென்று தடை செய்தன என்று கூறுகிருர். இவை யிரண்டும் தீய சகுனங்களே என்பது தடைசெய்வன என்றதனுலும் இங்கு இடையூறுளது என்றதனுலும் தெளிவாக அறியலாம். ஆதலின் இவைகளின் நீக்கமாக நன்மைக் குறிகுறியான சகுனமொன்றும் கம்பர் கூருதுவிடுத்தமை தெளிவாம். மேலும் சகுனப்பலனைக் கூறியது வசிட்ட முனிவனென்று வால்மீகி கூற கம்பரோ புட்குறியாளனை அழைத்து வினவ அவன் கூறினனென்று கூறுகிருர். பாசுராமன் வந்தவுடனே அவனை முனிவர்கள் வரவேற்றதைக் கூருது விடுத்ததோடு அவர்கள் நினைந்தவைகளைத் தசரதன் வாயிலான் உணர்த்திருர். கம்பர் மேலும் பாசுராமன் இராமனிடம் வில் வலியைத் தன் வில்லைவளைத்தலாலே சோதித்துப் பின் அவனேடு கைச்சண்டையிடுவதாகக் கூறுவதைக் கம்பர் கூருது விடுத்தார்.

கார்த்த வீரியார்ச்சுனனென்ற மன்னன் பாசுராமருடைய தந்தையைக் கொன்ருன். அதற்காகப் பாசுராமன் இருபத்தொரு

தலைமுறையாக அரசர்களைக் கருவறுத்தான். இது மிகவும் தீய தொரு செய்கை. இத்தீய செய்கையை அறிவும் ஒழுக்கமுமுடையோர் ஒவ்வொருவரும் வெறுப்பார் என்பது திண்ணம். இஃதிவ்வாறாக, இராமன், அச்செயல் தந்தையின்பொருட்டுக் கடமையாகச் செய்தமையின் அது மிக நன்றென்று உடன்பட்டதாக வால்மீகி கூறுகிறார். ஆனால் கம்பரோ அச்செயலில் இராமன் வெறுப்புக் காட்டியதாகவே கூறுகிறார். அச்செய்யுள் வருமாறு:—

"பூதலத் தரசையெல்லாம் பொன்றுவித் தனையென்றாலும்
வேதவித் தாயமேலோன் மைந்தநீ விரதம் பூண்டாய்
ஆதலிற் கொல்லலாகா தம்பிது பிழைப்ப தன்றால்
யாதிதற் கிலக்கமாவ தியம்புதி விரைவினென்றான்"

இதன் கருத்து "நீ கொலைப் பாதகனாயினும் நான் உன்னைக் கொல்லப்போவதில்லை" யென்பது. பரசுராமனை கொல்லாதிருப்ப தற்கு இராமன் கூறியதாகக் கம்பர் கூறும் காரணத்தில் "வேதவித் தாய மேலோன் மைந்தன் நீ" என்பது பொருந்தாது. விசுவாமித் திரனுக்கு நெருங்கிய உறவினன் பரசுராமன். ஆதலின் விசுவாமித் திரனுக்காக உன்னைக் கொல்லாது விடுகிறேனென்று இராமன் கூறியதாக வால்மீகி கூறியதே பொருத்தமானதாம். ஏனெனில் விசுவாமித்திரனுடைய மாணவனும் இராமன்

"இந்த அம்புக்கு இலக்கமாவதியாது கூறு" என்று மட்டும் இராமன் கேட்டதாகவும் அதற்கு மறுமொழியாக பரசுராமன் "என் தவ வலியைக் கெடு" என்று புகன்றதாகவும் கம்பர் கூறுகிறார். இதனால் இராமனுடைய தீய குணம் புலனாகவில்லை. வால்மீகியோ இராமனைத் தீயவனாகக் காட்டுகிறார். எப்படியெனில் இராமன் பரசுராமனை நோக்கி "உன் காலை முறித்து உன்னை நொண்டியாக்கவா? அல்லது உன் தவ வலியைக் கெடுக்கவா?" என்று கேட்டனனாம். இதனால் இராமன் எவ்வளவு தீய மனதுடையவன் என்பது புலனாகிறது. இவனைத் தெய்வம்போல் கூறி மயக்குமாறு இவனுடைய தீய செயல்களையெல்லாம் கம்பர் மறைத்தார்.

பாதனுடைய தாய் மாமனான யுதாசித்து மிதிலையிலேயே வந்து சேர்ந்தமையை வால்மீகி கூறுகிறார். அதைக் கம்பர் கூறுகின்றிலர். மேலும் "உன் மாமா யுதாசித்து உன்னை அழைத்துப்போக வந்தி

ருக்கிறன்." என்று பரதனிடம் தசரதன் கூறியதாக வால்மீகி கூற இவ்விவரத்தைக் கம்பர் கூறாது "உன் பாட்டன் பார்க்க விரும்புகிறன்; அதனல் நீ கேகயம் போ" என்று தசரதன் கூறியதாகக் கூறுகிறர். கடைசியாக மட்டும் கம்பர் யுதாசித்தை பரதனுக்குத் துணை சென்ற ஓர் தானைத் தலைவனைப்போல் மயங்கிக் காட்டுகிறர். அச் செய்யுள் வருமாறு:—

"உளைவிரி புரவித்தேரு தாசித் தென்றெனும்
வளைமுரல் தானையான் மருங்கு போதப்போய்
இளையவன் றன்னெடு மேழு நாளிடை
நளிர்புனற் கேகய நாடு நண்ணினன்."

இவ்விடத்தில் கம்பர் உதாசித்தைப்பற்றிய விவரமறியாமல் மயங்கியிருக்க வேண்டும்; அல்லது வால்மீகத்தில் கூறியிருக்கும் விவகாரம் இடைச் செருகலாயிருக்கவேண்டும். ஆனல் இடைச் செருகல் என்பதற்குத் தகுந்த ஆதாரமில்லை. ஆதலின் கம்பர் மேலதே தவறு.

பரதன் தன்னுடன் சத்துருக்கனை மட்டும் அழைத்தேகியனுவன். அவ்விருவரும் தம் மனைவியரை அயோத்தியிலேயே விட்டேகினர். இவ்வாறு பரதனை அயோத்தியை விட்டுப் போகச்சொல்வதற்குத் தசரதன் கூறிய காரணம் அவன் பாட்டன் அவனைப்பார்க்க விரும்புகிறனென்று அவன் மாமனன யுதாசித்து வந்து கூறியதே. கேகய மன்னன் பரதனைப் பார்க்கவிரும்பியது அவனுடைய மணத்தின்முன். அவனுடைய மணச்சேதி யறிந்தவுடன் அவன் பாட்டனுடைய கடமையாவது புதுப்பெண்ணையும் மாப்பிள்ளையையும் அயோத்தியில் வந்து பார்ப்பதேயாகும். அல்லது பெண்ணையும் மாப்பிள்ளையையுமாக அழைத்துப்போதல் வேண்டும். தசரதனுடைய கடமையும் மணச்செய்தியை யறிவித்துத் தன்னுடைய மாமனுரை அயோத்திக்கு வரவழைப்பதே யாகும். யுதாசித்து வந்து காத்திருந்தானேனும் அவன் காத்திருப்பதை ஓர் காரணமாகக் காட்டிப் பரதனை கேகய நாட்டிற்கு அனுப்பியது மிகக் கொடிய செயலே அப்போதுதான் மணமுடிந்து புதுமண இன்பம் நுகர்ந்திருந்த பரதனை வேறு நாட்டிற்கு அனுப்புவதற்குத் தகுந்த காரணம் வேண்டும். பரதன் பிரிந்துபோனபின் அயோத்தியில் நடந்த

நிகழ்ச்சிகளை வால்மீகி கூறுகிறார். கம்பரோ அவைகளை கூறாது விடுத்தார். அதாவது இராமன் குடிகளோடு நெருங்கிப் பழகி அவர்களுக்கு மிகவும் வேண்டியவனாக நடந்து அவர்களுடைய மனத்தைக் கவர்கிறான். இவ்வாறு பரதனைப்பிரித்து இராமனைக் குடிகளோடு நெருங்கிப் பழகச் செய்வதே தசரதனுடைய நோக்கம் போலும். அதாவது இளவரசுப் பட்டம் பெறுவதற்குத் தகுந்தவனல்லாத இராமனிடத்தில் மிகுந்த அன்பு கொண்டிருந்த வஞ்சகனாகிய தசரதன் பட்டத்துக் குரியவனான பரதன் அயோத்தியிலிருக்கும்போது இராமனுக்குப் பட்டங்கட்ட முடியாதென நன்குணர்ந்து பரதனை நாடுகடத்தி, இராமனைக் குடிகளோடு பழகி அவர்களுக்கு மிகவும் நல்லவனாக நடக்குமாறு செய்து குடிகளுடைய அன்பைப் பெற்று இராமனுக்குப் பட்டங் கட்டவே இவ்வாறு பரதனை வஞ்சித்தான். இவ்விவரமெல்லாம் அயோத்தியாகாண்ட ஆராய்ச்சியில் பரக்க ஆராய்வோம். மக்களிலே பக்கவாதம் செய்யும் இவ்விழிதகைமையனான தசரதனுடைய வஞ்சக இழி குணந்தானென்னே?

---

# பதினான்காம் அத்தியாயம்.

## முடிவுரை.

---

இத்துடன் பாலகாண்ட ஆராய்ச்சி முடிவடைகிறது. இதன் முதலாவது கட்டுரையில் திருமால் இராமனாகப் பிறப்பதற்கு முன் செய்த தீய செயல்களும்; இரண்டாவது கட்டுரையில் கலைக்கோட்டு முனிவனுடைய சிற்றறிவும்; ஒழுக்கக்கேடும்; மூன்றாவது கட்டுரையில் அசுவமேத யாகத்தின் ஆபாசங்களும்; நான்காவது கட்டுரையில் தசரதன் அறுபதினாயிரத்து மூன்று மனைவியரை மணந்து அவர்களுடைய நலத்தைக் கெடுத்த செய்தியும்; ஐந்தாவது கட்டுரையில் தாடகை, மாரீசன் முதலிய தமிழ்ப் பெருமக்களைப் பற்றி ஆரியர் கூறும் இழி மொழிகளும்,அவர்களைத் தீயவர்களைப் போலக் காட்டும் ஆரியர்களுடைய இழிகுணமும், தாடகையை இராமன் கொன்ற தீய செயலும், உத்தமனாகிய மகாபலிச் சக்கரவர்த்தியைத் திருமால் கொன்ற கொலைப்பாதகமும், வாயுபகவான் குசநாபனு

டைய பெண்களிடத்தில் நடந்துகொண்ட தீயவொழுக்கமும்; ஆறு வது கட்டுரையில் முருகக் கடவுளைப் பற்றிய ஆரியரின் ஆபாச வரலாறும் அறிவின்மையும் அக்கினியின் இழிவான செய்கையும், சகரன் குதிரையைத் திருடிய இந்திரனுடைய திருட்டுத்தனமும் தீய ஒழுக்கமும், தன்னுடைய பெரிய தாயாகிய திதியிடம் அவ்விந்திரன் நடந்துகொண்ட வெறுக்கத்தகுந்த நடத்தையும் கொலைபாதகமும், ஏழாவது கட்டுரையில் இந்திரன் அகலிகை என்ற முனி மனைவியை கூடிச்செய்த கூடா ஒழுக்கமும்; எட்டாவது கட்டுரையில் கோசிக முனிவன் இந்திரனைச் சபித்ததும், அதன் பின் பிதுர் தேவதைகள் தாங்கள் உண்ணும் ஆட்டு விருஷணங்களை இந்திரனுக்குக் கொடுத்துத் தாம் விருஷணமற்ற ஆடுகளைத்தின்னும் புலைச் செயலும்; ஒன்பது பத்து பதினோராவது கட்டுரைகளில் விசுவாமித்திர முனிவனுடைய வெறுக்கத்தகுந்த வரலாறுகளும் ஏனைய வசிட்டன் முதலிய முனிவர்களுடைய இழி குணங்களும், திருமால் சிவன் விற்களின் வரலாறுகளும்; பன்னிரண்டாவது கட்டுரையில் சீதை திருமண மாற்றம் பற்றியும்; பதின்மூன்றாவது கட்டுரையில் பரசுராமன் வரலாறும், தசரதனுடைய மக்களிற் பக்கவாதமும் நன்றாக ஆராய்ந்தோம். இனி இரண்டாவது காண்டமாகிய அயோத்தியாகாண்ட ஆராய்ச்சியைத் தொடங்குவோம்.

(இது வரை செய்துவந்த இவ்வாராய்ச்சி சம்மந்தமான ஆக்ஷேபணைகளுக்கு சமாதானம்.)

அதன் முன் இதைப் படிக்கும் அன்பர்களுக்குச் சில மொழிகள் கூற விரும்புகின்றோம். இதுவரை நமக்குத் தெரிந்தவரை நமது ஆராய்ச்சியைப் பற்றித் "தமிழ் நாடு" என்ற பத்திரிகையில் சென்ற பங்குனி மாதம் 22உ செவ்வாயன்று "நாயகரின் பிரசாரம்" என்ற தலைப்பில் இலங்கை வை. வே. துரைசாமிப் பிள்ளை என்பவரும், சித்திரை மாதம் 16உ சனிக்கிழமையன்று "நாயகரின் பிரசாரம்" என்ற தலைப்பில் சாமிநாதன் என்பவரும் சில அடாமொழிகள் வரைந்துளர். அவைகளைப்பற்றி நாம் மறுமொழி கூறத் தகுந்தவாறு அமையாது அவை மிகவும் அற்பமானவையாக இருந்தாலும் அவைகளை வாசிக்கும் சாதாரண மக்கள் மயங்காவண்ணம் சில கூற வேண்டுவது அவசியமாகின்றது.

முதலில் இலங்கை துரைசாமிப் பிள்ளை அவர்கள் கூற்றை ஆராய்வோம். இவர் ஆரியப் புரட்டை ஒப்புக்கொண்டு "கோசலை யாகம் செய்யவந்த ரிஷியுடன் சோரம் போய் ஸ்ரீராமரைப் பெற்ருள் என்பதைப் போன்ற முழுப்புரட்டான, சுத்த ஆபாசமான பொய்யான, அசங்கித வார்த்தைகளை வரைவதால் மதப்பற்றுள்ள இந்துக்களின் இரத்தம் கொதிப்பேறும்" என்று வரைகிருர்.

நமது பிள்ளையவர்கள் இவ்வாறு எழுதுவதைப் பார்த்தால்இரத்தக் கொதிப்போடு வரைவதாகவே தோன்றுகிறது. மதத்தில் பற்றில்லாதார் மனிதரே ஆகார். ஆனுல் மதம் என்பது இது; அதன் உண்மைகளின்னின்னவை என்றுநன்ருக ஆராய்ந்து பற்றுக்கொள்ள வேண்டுமேயொழிய ஆராய்ச்சியில்லாது கொள்ளும் பற்று தகுந்ததாகாது. அறிவுடைய மக்கள் ஆராய்ச்சியிஞலேயே உண்மைப் பற்று உண்டாகுமென்பர். நமது பிள்ளையவர்கள் கொண்டுள்ள பற்று உண்மை ஆராய்ச்சியாலான பற்ருகாது. நாம் கூறியகூற்ருனது அவர் " " இவ்வடையாளமிட்டது; ஆனுல் அது நாம் வரைந்துள்ளதின் சுருக்கமாம். அதில் இராமன் என்கிற ஒரு சாதாரண அரசனை, தமிழ் மக்களாகிய நம்மைக் கெடுத்த ஆரியஞகிய அவனை, இராமனென்று அவர் தெய்வமெனக் கருதிப் பன்மைப்பட மரியாதையாகப் பிள்ளையவர்கள் வரைவது உண்மைத் தமிழ் மகன் ஒவ்வொருவனுக்கும் இரத்தக் கொதிப்பையே தரும் என்பது உண்மை. நமது பிள்ளையவர்களும் கொஞ்சம் அமைதியோடு தயவுசெய்து நமது ஆராய்ச்சியைப் படிப்பாரெனின் அவர்களும் இனிஇவ்வாறு எழுத முன்வரமாட்டார்களென நம்புகிருேம்

கோசலை சோரம்போய் இராமனைப் பெற்ருள் என்ற உண்மையைப் பல மேற்கோளுடன் நாம் நிலைநாட்டியிருக்க அதனைக் கொஞ்சமும் ஆராயாமல் அவர்கள் அவை யெல்லாம் முழுப்புரட்டான மொழிகளென்கின்றனர். நம்முடைய சொந்த வசனம் ஒன்றும் கூருது, வால்மீகிமுனிவர், அவருடைய சொற்களை மொழிபெயர்த்த பெரியோர் இவர்களுடைய கூற்றுக்களையே நாம் எடுத்தியம்பியுள்ளோம்.ஆதலின் நாம் எடுத்தியம்பியது முழுப்புரட்டாயின் வால்மீகி முனிவரும் ஏனைய பெரியோரும் முழுப்புரட்டாகவேண்டும். ஆதலின் நமக்கோர் குற்றமின்ரும். ஆகையால் நமது பிள்ளையவர்களை

மிகவும் அமைதியுடனும் பொறுமையுடனும் நன்ருக ஆராய்ந்து பார்த்து உண்மையைத் தெரிந்து கொள்ளவேண்டுகின்றோம். நண்பர் சுவாமிநாதனுடைய சொற்களின் ஆராய்ச்சி விரியுமாதலின் அதனை இக்கட்டுரையின் தொடர்ச்சியாக அடுத்தகாண்டத்தில் விரித்தெழுதுவோம்.

இனி 'தமிழ் நாடு' என்ற பத்திரிகையில் நாயக்கர் பிரசாரம் என்ற பெருந்தலைப்பின்கீழுள்ள "நாயக்கரின் மோயணம்" என்ற சிறுதலைப்பிட்டு திரு. சாமிநாதன் என்பவர் எழுதியுள்ளதை ஆராய்வோம்.

முதலில் அவர் "குடி அரசில் இராமாயணக் கட்டுரைகளில் தாடகை என்பவள் சிறந்த பதிவிரதா சிரோமணி என்றும், இராவணன் உண்மையான கடவுள் பக்தி மிகுந்த அரசனென்றும், அகலிகை கௌதமனுக மாறுருக்கொண்ட இந்திரனுடன் மோசம் போய்ச் சேரவில்லையென்றும், இந்திரனைக் கண்டவுடன் அவனழகில் ஈடுபட்டுத் தெரிந்தே அவனுடன் கூடினுளென்றும், தசரதன் புத்திரகாமேஷ்டி யாகம் செய்துவைத்த ரிஷிகளிடம் தன்னுடைய பத்தினிமார்களை ஒப்படைத்தான் என்றும், இன்னும் அநேக விஷயங்களை, இமயமுதல் குமரிவரையுள்ள இந்திய மகாஜனங்களால் நல்லவர்களாக எடுத்துக்காட்டி குறிப்பிடும் இராமாயண காவியத்தின் பாத்திரர்களைக் கெட்டவர்களாகவும், கெட்டவர்களாக வழக்கச் சொல்லிலேயே வழங்குபவர்களை நல்லவர்களாகவும் மாற்றி இதுவரை இந்திய நாட்டினவர்களுக்கு விளங்காத உண்மை வெளிவருகின்றது. இந்த உண்மையான விஷயங்கள் இவர்களுக்கு எங்கிருந்து கிடைத்தன" என்று வினவியிருக்கிருர்.

இவரைப்போலும் கல்வி அறிவில்லாத மக்கள் பல மலிந்துள்ளமையாலேயே நமது நாடு பாழான நிலைமையிலுள்ளது. இந்தச் சாமிநாதன் கல்வி அறிவற்றவர் என்பதை நாம் அவர் எழுதிய கட்டுரையினுலேயே நன்கறியலாம். நாம் இக் "குடி அரசி" ல் இராமாயணத்தைப்பற்றி எழுதிவரும் செய்திகள் நமது சொந்தமல்ல; வால்மீகி முனிவர் வடமொழியில் எழுதியுள்ள இராமாயணத்தை பண்டித அனந்தாச்சாரியார், பண்டிதநடேச சாஸ்திரியார் சி. ஆர். சீனிவாசய்யங்கார் பி. ஏ. முதலியவர்கள் தமிழிலும், பண்டித மன்மதநாததத்தர் ஆங்கிலத்திலும் மொழிபெயர்த்திருக்கின்ற

னர். அவர்களுடைய கூற்றையே கூறி ஆராய்வோம் என்று கூறி வருகிறோம். நமது சாமிநாதன் அம்மொழிபெயர்ப்புக்களில் ஒன்றை யேனும் வாங்கிப் படித்தனரா? என்று கேட்கின்றோம். அவர் இக் "குடி அரசை" ப் படிக்குமுன் இந்நூல்களைப் படிக்காதவரேனும் "இதனைப் படித்தபின்னராயினும்" அநியாயகமாகக் "குடி அரசி" ல் செய்திகள் வருகின்றனவே இவைகள் உண்மைதானா என்று அவை களைப் படித்துப் பார்த்தனரா? இவ்வாறு சுயபுத்தியுமின்றிச் சொற் புத்தியும் கேளாமல் அறிவுபெற வேண்டுமென்ற எண்ணமும் இல்லாமல் சுவாமிநாதன் என்ற பெயர் பத்திரிகையில் வரவேண்டும். வாயில் வந்ததை உளறலாம் என்ற எண்ணம் மட்டும் கொண்டு கட்டுரை எழுதவந்த இந்தச் சாமிநாதனின் நிலை மிகவும் பரிதபிக்கத் தக்கதே! ஆசிரியர் திருவள்ளுவ நாயனர் தெய்வத் திருக்குறளில் "அரங்கின்றி வட்டாடி அற்றே நிரம்பிய! நூலின்றி கோட்டி கொளல்" எனத் திருவாய் மலர்ந்தருளிய இலக்கணத்துக்கு இவர் ஓர் நல்ல எடுத்துக்காட்டானர். அரங்கிடாமல் வட்டாடுவோரும் நூல் அறிவில்லாமல் பேசவும் எழுதவும் முன்வருவோரும் எக்காலத்தும் இருப்பதனாலேயே தெய்வப் புலவர் இவ்வாறு கட்டளையிட்டனர் போலும். இனியாவது இச்சாமிநாதன் நன்றாகப் படித்துவிட்டுப் பின்னர் எழுத முன்வருவாராக.

ஆரியப் பார்ப்பனர் மயக்கத்தில் எவ்வாரோ அகப்பட்டு மயங் குபவரோ? அன்று அவ்வகுப்பினரில் ஒருவரோ இச் சாமிநாதன்? மேலே நாம் கூறியுள்ள மொழிபெயர்ப்பாளர் நால்வரில் அனந்தா சாரியரும் சீனிவாசய்யங்காரும் வைணவ சமயத்தினர். மற்றிருவ ரும் ஆரியரே. இவர்களெல்லோரும் அகலிகை சோரம்போனமை யையும் தசரதன் தனது பத்தினிமார்களை ரித்விக்குகளிடம் ஒப்ப டைத்ததையும் ஒப்புக்கொண்டு உண்மையை உள்ளவா றெழுதி யிருக்க அவைகளைத் தாமும் படியாமல் படித்த நமது கூற்றையும் கேளாமல் இவர் பிதற்றுரை பல வரைகின்றனரே? கொஞ்சம் எழு தப் படிக்கத் தெரிந்த அரைகுறைப் படிப்பாளியாகிய நம் சாமிநா தனே ஆரியப் புரளில் இவ்வாறு ஏமாறி மயங்கிக் கிடந்தனரென் ருல் கொஞ்சமும் படியாமலிருக்கும் சாதாரண மக்களின் நிலையைக் கூறவும் வேண்டுமோ? தாடகா பிராட்டியாருடைய பெருமைகளை இவர் தேவாரத்தைப் படித்து உணர்வாராக.

இனி அவர் தமக்கே பொருள்படாதெழுதும் வெற்றுரைகளை விடுத்து அவர் பின் எழுதும் "ராமாயணத்தில் அநேகஜனங்கள் வெகு வாய்த் தெரிந்துகொண்டிராத—ராமனுடைய குற்றமெனக் கருதிக் கொண்ட ஒரு பார்ப்பனக் குழந்தையின் மரணத்துக்காக ஒரு சூத்திர

னைச் சிரச்சேதம் செய்த—கதையை எடுத்துக் காட்டவந்த நாயக்க ருக்கு எல்லாராலும் ஸ்பஷ்டமாய் தெரிந்திருக்கும்படியான விஷயமாகிய குகனென்னும் படகோட்டி விஷயத்தில் ஜாதி வித்தியாசமின்றி அவனை அன்போடாதரித்து அவனையும் சகோதரர்களில் ஒருவனுகச் சேர்த்துக்கொண்ட உண்மைநெறியும், வானரர்களை வித்தியாசமின்றி அன்பினல் பிணித்துக்கொண்டு அவர்களுடன் ஒன்ருயிருந்து காலங் கடத்திய நீதிமுறையும், மானிடவகுப்பைச்சேராத சடாயு என்னும் பக்ஷியின்மேல் வைத்த அன்பினலதன் மரணத்துக்காக கண்ணீர்விட்டுக் கதறியழுது அதைப் புள்ளினமெனக் கருதாது அதற்கும் மனிதர்களுக்குச் செய்யவேண்டிய ஈமக்கடன்களைத் தானேசெய்த நேர்மையும், சபரி என்னும் ஒரு ஏழைப் பெண்ணுலளித்த உணவுகளை உண்ட அன்பின் பெருக்கும், அரக்கர் குலத்தைச் சேர்ந்த விபீஷணரின் நேர்மையான நடத்தையைக் கருதி அவரை அரக்கனெனத் தள்ளாமல் தன்னுடன் சேர்த்துக்கொண்ட சமத்துவ நீதியும், நிராயுத பாணியாய் தன்னுடைய பாணத்தினுல் ஏற்படும் மரணத்தைத் தவிர வேறு கதியற்றவனுக நின்ற ராவணனை "இன்று போய் நாளை வா" என்று சொன்ன அரச நீதியும், வண்ணுன்தானே என்று அலட்சியம் செய்யாமல் அவனும் ஒரு பிரஜா உரிமையுடையவனெனக் கருதி அவன் சொல்லுக்கும் தான் கட்டுப்படவேண்டும் என்னும் காரணத்தால் தன்னுடைய மனைவியாகிய நாட்டின் அரசியை காட்டிற்கனுப்பிய நன்னடத்தைகளும் இராமன்பால் இருக்க, சமத்துவ வேஷம் பூண்ட நாயக்கருக்கு இவைகளெல்லாம் விளங்காமல் அந்த ஒரு விஷயம் மட்டும் அடிக்கடி பல சமயங்களிலும் நிதர்சனமாய்க் கொண்டுவருகின்ற நேர்மைதானென்னே!" என்ற கூற்றினை ஆராய்வோம். மேலே கண்ட கூற்றுகளைப் படித்துப் பார்த்தால் அது ஓர் பார்ப்பனன் தமிழாகவே காணப்படுகிறது. ஆதலின் சாமிநாதன் என்பவர் ஓர் பார்ப்பனராதல் வேண்டும். அன்றி பார்ப்பனன் பெற்ற பிள்ளையைத் (கட்டுரையை) தாம் பெற்ற பிள்ளையாகக் கொண்ட ஓர் பார்ப்பனரல்லாதா ராகவேண்டும். இவர் பார்ப்பனரல்லாதாரெனின் இவர் பிறருக்குப் பிறந்த பிள்ளைகளைத் தன்னவையெனக்கொண்ட தசரதன் செயலுக்குப் பரிந்து பேசுதற்கு ஒப்பமிட்டது வியப்பாகாது. அன்றி பார்ப்பனரேயெனின் இவ்வாறெழுதுவது அவரியல்பே. இத்தகைய கட்டுரையை வெளிப்படுத்தியவரின் பெருமைதானென்னே? இதனுல் "தமிழ் நாடு" ஆசிரியர் பெருமையும் கல்வியும் ஆராய்ச்சி வன்மையும் இனிது புலனுகும். குலத்தைக் கெடுக்கும் கோடரிக் காம்புகளும் உள. இனி மேலே குறித்துள்ள கூற்றுகளை ஆராய்வோம்.

இராமன் ஓர் பார்ப்பானுக்காக ஓர் சூத்திரனுடைய தலையை வெட்டிய அநியாயத்துக்குச் சமாதானம் கூறுவதை விடுத்து நமது சாமிநாதன் வேறு பல விரித்தார். விரித்தமையும்மிக அழகிதே. இராமனைப்பற்றிய வேறு சில செய்திகளைக் குறித்தார். அவைகளை வரும் போது விவரமாக ஆராய்வோமேனும் ஈண்டுச் சுருங்கக்கூறுவோம். குகனுடைய உதவியில்லாமல்போனால் இராமன்கங்கையைக்கடத்தலரிது ஆதலின் அவனுடைய உதவிபெறுதற்காக இராமன் அவனை அவ்வாறு பேசி மயக்குகிறான். இராமன் ஓர் ராஜதந்திர நிபுணனே. குரங்குகளோடு அவன் கூடி வாழ்ந்தது அவன் பெற்ற சாபப் பயனேனும் அவன் வாலியை மறைந்து கொன்று சகோதரத் துரோகியாகிய சுக்ரீவனோடு நட்புகொண்டது பாதனாகிய தனது சகோதரனுக்குத் துரோகம் நினைத்த அவ்விராமனுக்கு இயல்பானதே இதுபோலவே சகோதரத் துரோகியாகிய விபீஷணனிடம் இராமன் நட்புக்கொண்டதும் அவனுக்கு இயல்பும் இராஜதந்திரமுமாம் இவ்வாறாக இவ்விருவருடனும் நட்புக்கொண்டதை இராமனுக்குப் பெருமையானதென மயங்கினர் சாமிநாதன்.

போரசைக்காரனும் சகோதரத் துரோகியுமாகிய விபீஷணனைத் தன்பக்கம் சேர்க்காதிருந்தால் இராமன் இராவணனைக் கொன்றிருத்தல் இயலாது "இராவணனுடைய நெஞ்சில் அம்பெய்து கொல்" எனக் கூறி அருகே நின்றானே பாவி விபீஷணன்! அநியாயம்!! அநியாயம்!! இன்று போய் நாளை வாவென இராமன் கூறியதாகக் கூறுவது இராமன்பாற் பற்றுடைய வால்மீகியும் கம்பரும் என்பதைச் சுவாமிநாதன் உணர்வாராக இனத்துரோகமும் இனத்துரோகச் சேர்க்கையும் தான் சுவாமிநாதனுக்குச் சமத்துவமாகத் தோன்றுகின்றனபோலும். தனக்கு உதவி செய்த சடாயுவுக்கு மனமிரங்கியது உலக இயற்கையே. நல்லுணவு கிடையாது திண்டாடிய இராமனுக்கு சபரி நல்லுணவு தர அதை அவன் ஆவலுடன் வாங்கி உண்டதும் அவனுக்கு ஓர் பெருமையோ? நன்றாகச் சாப்பிட்டதை ஓர் பெருமையாகக் காட்டியதும் சாமிநாதனுக்கும் ஓர் பெருமையே. இவைகளால் இராமனுடைய துரோகச் செயல்கள் இனிது புலனாகும். இராமன் சூத்திரனைக் கொன்றது அதிபாதகமே அதனால் இராமன் சிறந்த அதர்மராஜனே என்பதும் விளங்குகிறது. இனி சீதையைப்பற்றி அவர் கூறுவதை கவனிப்போம்.

இராமன் சீதையின் கற்புடைமையில் ஐயுறுகின்றான். சீதையை இராவணன் பற்றி மடியில் வைத்துப்போனதும் அவனுடைய வசமாக அவள் பத்து மாதம் வாழ்ந்ததுமே அவ்வையுறவுக்குக் கார

ணம். சிதையும் தன்னுடல் இராவணன் வசமிருந்ததை ஒப்புக் கொள்கிறாள்.

இராமன் அரசாளும் நாளையிலே ஓர் வண்ணான் அந்நியனோடு வாழ்ந்த சிதையை இராமன் சேர்த்துக்கொண்ட இழிசெயலை மிக இழித்துப் பேசுகிறான். அதனால் மானம் பொறுக்கமாட்டாமல் இராமன்நிறைந்த காப்பிணியாக இருந்த சிதையைக் காட்டுக்குவஞ்சகமாக அனுப்புகிறான். இவ்விழிந்த செயலைப் பாராட்டிச் சாமிநாதன் "வண்ணான்தானே என்று அலட்சியம் செய்யாமல் அவனும் ஒரு பிரஜா உரிமையுடையவனெனக் கருதி அவன் சொல்லுக்கும் தான் கட்டுப்படவேண்டுமென்னும் காரணத்தால் தன்னுடைய மனைவியாகிய காட்டின் அரசியை காட்டிற்கனுப்பிய நன்னடத்தைகளும்" என்று எழுதினர். பிரஜா உரிமை பற்றியும் அரசாளுமுறை பற்றியும் நன்னடத்தைப்பற்றியும் இச்சாமிநாதனுக்குள்ள அறிவு மிக அழகிதே. இவ்விழிந்த ஆராய்ச்சியையும் "தமிழ்நாடு" வெளிப்படுத்தியதே! அறிவாளர் நகையாடக்கூடிய இத்தகைய கட்டுரைகளை வெளிப்படுத்துவதினும் நல்ல கட்டுரைகள் கிடையாதுபோலும் வெள்ளைத் தாள்களை மடித்துச் சந்தாதாரர்களுக்கு அனுப்பின் மிக நலமாயிருக்குமே.

கேவலம் வண்ணானொருவன் தன் மனைவியின் நடத்தையில் ஐயுற்றது காரணமாகத் தன் மனைவியை அதிலும் பூரண கருப்பிணியை ஒருவன் காட்டுக்கு அனுப்பினானென்றால் அவனைப்போலும் அறிவில்லாத முழுமுடன் ஒருவன் இவ்வுலகத்தில் இதுகாறும் தோன்றியிருப்பானோ என்பதைச் சாமிநாதன் சிந்திப்பாராக. இராமன் இதனால் மிகவும் முழுமுடனாதல் வேண்டும். அன்றியும் இரக்கமற்ற பாவியுமாதல் வேண்டும். தன்னுடைய மனைவியும் பூரண கருப்பிணியுமாகிய சிதையென்ற ஒரு பெண்ணினிடத்திலேயே இவ்வாறு மிருகத்திலும் கேடுகெட்ட மிருகம்போல நடந்துகொண்ட இராமன் தவம் செய்துகொண்டிருந்த ஓர் சூத்திரனுடைய தலையை வெட்டினானென்பது ஓர் ஆச்சரியமன்று. விவேகானந்தர் கூறுகிறாரென நம்பும் இடைச் செருகலெனும் நம்பிக்கையைச் சாமிநாதன் விட்டொழிப்பாராக. மேலும் சிதை கற்பிழந்தவளாகாதிருந்தால் அவள் கணவனாகிய இராமன் ஐயுற்றதோடு நில்லாமல் உறுதிகொண்டு அவளைக் காட்டுக்கு அனுப்பியிரானன்றோ? அவாது பாரதக் கூற்றாராய்ச்சியை வரும்போது எழுதுவோம். அதற்கு இடனின்மும், ஆதலின் மேற்செல்லுதும்.

---

பாலகாண்டம் ஆராய்ச்சி முற்றிற்று.

# திருக்குறள் மூலமும், உரையும்.

---

சமத்துவம், சகோதரத்துவம், பிறப்பில் உயர்வு தாழ்வின்மை, பெண் சுதந்தரம் முதலிய அரிய நீதிகளைப் போதிக்கும் சிறந்த பண்டைத் தமிழ் நூலாகிய "திருக்குறளை" உரையுடன் 8 அணுவிற்கு கொடுக்கின்றோம். தேவைக்கு உடனே எழுதுங்கள். தாமதித்தால் கிடைக்காது.

இப்புத்தகத்தைப் பற்றிய பல சிறந்த பத்திரிகைகளின் மதிப்புரைகளின் சுருக்கம் கீழ் வருமாறு:—

திராவிடன்:- திருக்குறள் 'ஒரு குலத்துக்கொரு நீதி' போன்ற நீதிகளை உடையதன்று என்று தெளிவாக விளக்குகின்றது. இது ஒவ்வொரு தமிழ் மகனது கையிலும் அவசியம் எப்பொழுதும் இருக்கவேண்டியது என்று நாம் வற்புறுத்திக் கூறுகிறோம். சுமார் இரண்டு ரூபாய் மதிப்புள்ள இத்துணைச் சிறந்த நல்லுரையை 8 அணுவிற்கே உதவுவது பெரிதும் போற்றத்தக்கது.
11-10-29.

தமிழ் நாடு:- தமிழ் மக்கள் யாவரும் திருக்குறளைப் படித்துப் பயன் பெறுமாறு பதிப்பாளருடைய நன்னோக்கத்தால் குறைந்தவிலையில் வெளியிட்டிருக்கின்றனர்.
17-8-29.

சுதேச மித்திரன்:- * * எல்லோருக்கும் பயன்படும்படி இப்பொழிப்புரை எழுதப்பட்டிருக்கிறது. சிறு வயதினின்றே இப்படி திருக்குறளைப் பரவச்செய்ய உத்தேசம் கொண்ட இவரது நோக்கம் ஈடேறிற்று. அச்சு முதவியன வெகு நேர்த்தி.
25-9-29.

குடி அரசு:-தமிழ் மக்கள் யாவரும் இதனை வாங்கிப் படித்து உண்மையை அறியும்படி வேண்டுகின்றோம். ஏறக்குறைய 300 பக்கங்கள் கொண்ட இப் பெரிய நூலுக்கு * * * அமைந்துள்ள விலை அணு எட்டு என்பது மிகமிகச் சிறிய தொகை என்றே நாம் கருதுகின்றோம். இந்நூல் மிக அழகாக மிகமிகத் தெளிவாக அச்சிடப்பெற்று வலிமையாக கட்டவும் பெற்றுள்ளது. 29-9-29.

நவசக்தி:-இப்பதிப்பு சுத்தமாயும், எளிய இனிய தமிழில் எழுதப்பட்ட பொழிப்புரையுடனும் கூடியிருக்கிறது. நன்றாகப் பதிப்பிக்கப்பட்டிருக்கிறது. * * * இந்நூலின் பெருமையை இப்பொழுதே தமிழ் நாட்டார் உணர ஆரம்பித்திருக்கின்றன ரென்பது தெரியக் கிடக்கின்றது.
5-6-29.

மானேஜர்,

குடி அரசு பதிப்பகம், ஈரோடு.

# "குடி அரசு" பதிப்பக வெளியீடு.

---

| | | |
|---|---|---|
| 1. | ஞானசூரியன் முன் விலை ரூபா 1-0-0 இப்போது விலை. | 0—4—0 |
| 2. | இராமாயண ஆராய்ச்சி முதல் பாகம், பாலகாண்டம். | 0—4—0 |
| 3. | இராமலிங்க சுவாமி பாடல் திரட்டு. | 0—2—0 |
| 4. | சுயமரியாதை தாலாட்டு. | 0—2—0 |
| 5. | சோதிடப்புரட்டு. | 0—2—0 |
| 6. | மநுநீதி மர்மம். | 0—2—0 |
| 7. | சுயமரியாதைப் பாடல். | 0—2—0 |
| 8. | பஞ்சஜம் அல்லது பார்ப்பனக் கொடுமை. | 0—4—0 |
| 9. | தர்மபரீக்ஷை அல்லது புராண ஆபாசம். | 0—4—0 |
| 10. | ஈ. வெ. ராமசாமியாரின் சீர்திருத்தமகாநாட்டின் முன்னுரை முடிவுரை. | 0—2—0 |
| 11. | பெரியா கூற்று மெய்யா பொய்யா. | 0—3—0 |
| 12. | கைவல்யம் அல்லது கலைக்கியானம். (முதல் பாகம்) | 0—8—0 |
| | திருக்குறள் மூலமும் பொழிப்புரையும். | 0—8—0 |

மானேஜர்,

"குடி அரசு" பதிப்பகம்,

ஈரோடு.

---

குமரன் பிரஸ், காஞ்சீபுரம்.